# மீன்கள்



## தெளிவத்தை ஜோசப்

தொகுப்பாசிரியர்: ஜெயமோகன்

நான்கு சுவர் உள்ள அந்தச் சதுரத்துக்குள் அடுப்பைப் போட்டு 'இது குசினி' என்று ஒரு பகுதியை ஒதுக்கிவிட்டு மிஞ்சியிருக்கும் முக்கால் அறைக்குள் மூன்று பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு அவைகள் கண்டும் காணாமலும் சம்சாரம் பண்ணி இன்னும் மூன்றைப் பெற்றுக்கொண்டதுவரை எல்லாம் அந்த ஒரே காம்பிராதான்.

அவனும் எத்தனையோ தடவை ஆபீசுக்குப்போய் துரையிடம் காலில் விழாக்குறையாகக் கெஞ்சியும் சண்டைபோட்டும் பார்த்துவிட்டான், தனக்கு இன்னொரு காம்பிரா வேண்டுமென்று.

பகல் வேளைகளில் வீடு இருக்கிறதா இல்லையா என்ற பிரச்சனையே கிடையாது. எல்லாத் தொல்லைகளும் இரவில்தான். அத்தனையையும் படுக்கவைத்தாக வேண்டுமே! கைகால் முளைத்துவிட்ட பிள்ளைகள் என்றாலும், இடநெருக்கடி என்று வெளியே எங்கேயாவது போய் சுருட்டிக்கொள்ளும். முளைக்கும் மீசையை நாசுக்காக நீவிவிட்டபடி படுக்கையும் தானுமாக நடந்துவிடுகிறானே மூத்த பையன், 'நண்பனுடன் படுத்துக்கொள்ளுகிறேன்' என்று. அதே போல் இந்தச் சின்னஞ் சிறுசுகள் எங்கே போகும்?

- நூலிலிருந்து...



## தெளிவத்தை ஜோசப்

தெளிவத்தை ஜோசப்பின் இயற்பெயர் சந்தனசாமி ஜோசப். பிப்ரவரி 16, 1934 இலங்கை தோட்டம் ஒன்றில் பிறந்தவர். கொழும்பு நகரில் ஒரு சாக்லேட் நிறுவன ஊழியராக இருந்து ஓய்வுபெற்றார். இப்போது கொழும்பு நகரில் வசிக்கிறார்.

தெளிவத்தை ஜோசப்பை கவனத்துக்குக் கொண்டுவந்த முதல் நாவல் 1974இல் வெளிவந்த 'காலங்கள் சாவதில்லை'. வீரகேசரி வெளியீடாக இந்நாவல் வெளிவந்தது. 1979இல் வெளிவந்த 'நாமிருக்கும் நாடே' சிறுகதைத் தொகுதிக்காக இலங்கையின் சாகித்திய அகாதெமி விருது பெற்றார்.

இலங்கையின் மலையக இலக்கியம் என்ற இலக்கிய வகைமையை நிலைநாட்டிய முன்னோடி என தெளிவத்தை ஜோசப்பைச் சொல்லலாம். 'மலையகச் சிறுகதைகள்' 'உழைக்கப் பிறந்தவர்கள்' என்ற இரு தொகைநூல்கள் வழியாக மலையக இலக்கியத்தை கவனப்படுத்தியிருக்கிறார். 2000ஆம் ஆண்டில் வெளிவந்த இவரது 'மலையகச் சிறுகதை வரலாறு' அவ்வகையில் முக்கியமான கொடை.

தெளிவத்தை ஜோசப்பின் 'குடை நிழல்' என்ற நாவல் 2010இல் வெளிவந்தது. இந்நாவல் கோமல் சுவாமிநாதன் நடத்திய சுபமங்களா மாத இதழும் தேசிய கலையிலக்கியப் பேரவையும் இணைந்து நடத்திய இலக்கியப்போட்டியில் பரிசுபெற்றது.

# மீன்கள்

தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள்

தெளிவத்தை ஜோசப்

தொகுப்பாசிரியர்
ஜெயமோகன்



நற்றிணை பதிப்பகம்

மீன்கள் * தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள் * தெளிவத்தை ஜோசப் * © தெளிவத்தை ஜோசப் * முதல் பதிப்பு: டிசம்பர் 2013 * வெளியீடு: நற்றிணை பதிப்பகம் (பி) லிட்., * ப. எண்: 123A, புதிய எண்: 243A, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-600005.

நற்றிணை பதிப்பக வெளியீடு: 87

Meengal * Selected Short Stories * Thelivathai Joseph * © Thelivathai Joseph * First Edition: December 2013 * Size: Demy 1/8 * Paper: 21.3 kg maplitho * Pages: 112 * Published by Natrinai Pathippagam Pvt. Ltd., Old No: 123A, New No: 243A, Triplicane High Road, Triplicane, Chennai-600005 * Phone : 044-28442855 * Mobile: 94861 77208, 94429 56725, 95001 04832 * E-mail: natrinaipathippagam@gmail.com
* natrinaipathippagampvtltd@gmail.com
* Website: natrinaipathippagam.com
* Printed at: Sai Thendral Printers, Chennai.
* Mobile: 95005 98012, 90954 91222, 90956 91222
* E-mail: saithendralprinters@gmail.com

# உதிர்ந்த ரத்தத்துளிகளின் கதை

## 1

கா. சிவத்தம்பி ஈழ இலக்கியத்தை மூன்றாகப் பிரிக்கலாம் என்று ஓரிடத்தில் சொல்கிறார். இலங்கையின் பாரம்பரியத் தமிழர்களால் எழுதப்படும் இலக்கியம். இது வடக்குப்பகுதி இலக்கியம் என்று சொல்லப்படுகிறது. இரண்டு, இலங்கை முஸ்லிம்களின் இலக்கியம். இவர்கள் வடகிழக்கிலும் தெற்கிலும் வாழ்பவர்கள். மூன்று மலையக இலக்கியம்.

மலையக இலக்கியம் பிற இரண்டிலிருந்தும் வேறுபட்ட வட்டார பண்பாட்டு அடையாளம்கொண்டது. எந்த ஓர் இலக்கிய வகைமையைப்போலவும் இதுவும் ஒருசில அடையாளங்களை மட்டும்கொண்டு செய்யப்படும் தோராயமான பகுப்புதான். படைப்புகளின் சமூக அரசியல் பின்னணியைப் புரிந்துகொள் வதற்கு மட்டுமே இது உதவும். இதனடிப்படையில் எந்த ஒரு படைப்பின் கலைப்பெறுமதியை வகுத்துக்கொள்ள முடியாது. படைப்பை முழுமுற்றாக இந்த அடையாளத்தால் குறிப்பிடவும் முடியாது.

மலையகம் என்று சொல்லப்படும் நிலப்பரப்பு இலங்கை யின் நுவரேலியா பகுதித் தேயிலைத்தோட்டங்கள் அடங்கிய மலைப்பகுதியாகும். இங்கே 1824ஆம் ஆண்டு கண்டி பகுதியில் தேயிலை, காப்பி தோட்டங்கள் அமைக்கப்பட்டன. அதற்கான கூலி உழைப்புக்காக பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் தமிழகத்திலிருந்து கொண்டுவந்து குடியேற்றப்பட்டனர்.

1769களிலும் 1877களிலும் தமிழகத்தை உலுக்கிய மாபெரும் செயற்கைப்பஞ்சங்களில் இங்கே லட்சக்கணக்கானவர்கள் பட்டினியில் மடிந்தார்கள். அந்தப் பஞ்சங்களிலிருந்து தப்பும் பொருட்டு மக்கள் தங்களையே அடிமைகளாக விற்றுக்கொண்டு கூலி உழைப்பாளிகளாக கிழக்கே நியூசிலாந்து முதல் மேற்கே

கரீபியன் தீவுகள் வரை பல்வேறு நாடுகளில் சென்று குடியேறி னார்கள். இவர்களில் மலேசியா, இலங்கை, பர்மா போன்ற சில நாடுகளிலேயே அவர்கள் இன்று தமிழ்பேசும் சமூகங்களாக நீடிக்கின்றார்கள். பிறர் தோல் நிறத்தாலும் சில பண்பாட்டுக் கூறுகளாலும் மட்டுமே தமிழர்களாக அடையாளப்படுத்தப் படுகிறார்கள்.

இலங்கை மலையகத் தமிழ்மக்கள் அவ்வாறு குடியேறிய வர்களின் சந்ததியினராக இன்று இலங்கையில் வாழ்கிறார்கள். இன்று நான்கு ஐந்தாம் தலைமுறையினராக இவர்கள் இருந்தாலும் பெரும்பாலானவர்கள் இப்போதும் தோட்டக்கூலி களாகவே உள்ளனர். அவர்களின் அடிமைக்கூலி வாழ்க்கைச் சூழலில் சமீப காலமாகவே மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. மலையக இலக்கியம் என்பது இந்த மக்களின் வாழ்க்கையைக் களமாகவும் கருவாகவும் கொண்டு எழுதப்படும் எழுத்துகளைக் குறிக்கிறது.

இவ்வாறு புலம்பெயர்ந்து தோட்டங்களில் அடிமைக் கூலியாக கொடுமைகளுக்கு ஆளாகி வாழ்ந்த மக்களைப்பற்றி தமிழிலக்கியத்தில் நேரடியான முதல்பதிவு என்பது பாரதி எழுதிய கரும்புத்தோட்டத்திலே என்ற கவிதை. அது தமிழகச் சூழலில் ஆழ்ந்த பாதிப்பை உருவாக்கியது. தமிழகத்தின் தேசிய இயக்கத்தினரில் கோ. நடேசய்யர், கோ. சாரங்கபாணி போன்று சிலர் மலேசியா, பர்மா, இலங்கை போன்ற ஊர் களுக்குச் சென்று அம்மக்களுக்கு அரசியல் உரிமையுணர்ச்சியை உருவாக்கும் பணியில் ஈடுபட அது வழிவகுத்தது.

மலையகத்தின் வாழ்க்கைச் சித்திரத்தை அளிக்கும் முக்கியமான முதல் கதை என்று புதுமைப்பித்தனின் 'துன்பக் கேணி'யைச் சொல்லலாம். கேள்விப்பட்ட தகவல்களைக் கொண்டே புதுமைப்பித்தன் இந்தக் கதையை எழுதியிருக்கிறார். அடிமைக்கூலியாகச் சென்ற ஒரு தலித் குடும்பத்தின் நோயும் அவமதிப்பும் மரணமும் நிறைந்த வாழ்க்கையைச் சித்தரிக்கும் இக்கதை உண்மையில் ஒரு நாவலுக்கான கட்டமைப்பு கொண்டது. புதுமைப்பித்தன் அதைப் பொறுப்பாக எழுதிமுடிக்க வில்லை. ஆகவே பிற்பகுதி சூம்பிப்போன ஆக்கமாக இது நின்றுவிட்டது.

மலையக மக்கள் பெரும்பாலும் அடித்தளத்தவர். அவர் களின் உணர்ச்சி வெளிப்பாடு நாட்டார் பாடலாகவே இருந் துள்ளது. மலையக இலக்கியத்தின் செல்நெறியும் தற்காலத்தில்

அதன் முக்கியத்துவமும் என்ற தன் கட்டுரையில் லெனின் மதிவானம் எடுத்துக்காட்டியிருக்கும் இப்பாடல் ஓர் உதாரணம்.

ஊரான ஊரிழந்தேன்
ஒத்தப்பனைத் தோப்பிழந்தேன்
போரான கண்டியே
பெத்த தாயே நா மறந்தேன்
பாதையில வீடிருக்க
பழனி சம்பா சோறிருக்க
எருமை தயிரிருக்க
ஏண்டி வந்தோம் கண்டி சீமை?

பழனியில் சம்பாச் சோறிருப்பதாக நினைத்துக்கொள்ளும் அந்தக் கற்பனையின் துயரம் இந்தப்பாடலை அழுத்தம் மிக்கதாக ஆக்குகிறது.

ஆங்கிலத் தோட்ட உடைமையாளர்கள் அவர்களின் ஏவலர்களான கங்காணிகள் நடுவே வாழ்க்கையை ஒரு பெரும் வதையாக மாற்றிக்கொண்ட மலையக மக்களிடையே அடிப்படை மனித உரிமைகளுக்காகவும் தேவைகளுக்காகவும் போராட வேண்டுமென்ற எண்ணத்தை உருவாக்கியது தொழிற்சங்க இயக்கம். அதன் முன்னோடி என்று கோ. நடேசய்யர் குறிப் பிடப்படுகிறார்.

நடேசய்யர் 1887ஆம் ஆண்டு தமிழகத்தில் தஞ்சாவூரில் பிறந்தவர். ஆங்கிலேயரின் வணிக ஆதிக்கத்துக்கு எதிராக இந்தியர்கள் எழவேண்டுமென்ற நோக்கில் 1914இல் வணிகர் களுக்காக வர்த்தகமித்திரன் என்ற பத்திரிகையைத் தொடங்கி, நடத்தினார். தஞ்சை மாவட்டத்தில் அரிசி ஆலை உரிமை யாளர்கள் சங்கங்களை உருவாக்கினார். அத்தகைய சங்க வேலைக்காக கொழும்புக்குச் சென்றார். அங்கே மலையகத் தொழிலாளரின் அடிமை வாழ்க்கையைப்பற்றி அறிந்து இலங்கையிலேயே நிரந்தரமாகத் தங்கி மலையகத் தமிழர் களுக்காக தன் வாழ்க்கையை அர்ப்பணித்துக்கொண்டார்.

நடேசய்யர் காங்கிரஸ் பின்னணி கொண்டவர். அவர் ஆரம்பித்த தேசநேசன் இலங்கையின் முதல் தமிழ் நாளிதழ். திரு.வி.க.வுடன் நெருக்கமான உறவுகொண்டிருந்தார். மலையக இலக்கியத்தின் பிதா என்று நடேசய்யர் குறிப்பிடப்படுகிறார். மலையக இலக்கியத்தில் முக்கியமான தொடக்கப்புள்ளி என்று குறிப்பிடப்படுபவர் சீ.வீ. வேலுப்பிள்ளை. வீடற்றவன், இனிப்படமாட்டேன், வாழ்வற்ற வாழ்வு போன்ற நூல்கள் இன்றும் பேசப்படுகின்றன.

மலையகத்தில் தொழிற்சங்க இயக்கம் ஆரம்பித்தபோது இடதுசாரி சிந்தனைகள் வேரூன்ற ஆரம்பித்தன. மலையக முற்போக்கு இலக்கியத்தின் முன்னோடி என்று கே. கணேஷ் குறிப்பிடப்படுகிறார். 1946இல் அகில இலங்கை எழுத்தாளர் சங்கம் என்ற அமைப்பை கே. கணேஷ் உருவாக்கினார். மாத்தளை சோமு, அந்தனி ஜீவா, சாரல் நாடன் போன்றவர்கள் பரவலாக அறியப்பட்ட மலையக எழுத்தாளர்கள்.

தெளிவத்தை ஜோசப் மலையக எழுத்தாளர்களில் முக்கிய மானவர். அழகியல்ரீதியாக மலையக எழுத்து முதிர்ச்சி யடைந்தது தெளிவத்தை ஜோசப்பின் படைப்புகள் வழியாகத் தான் என்று நினைக்கிறேன்.

## 2

வாசிப்பு வசதிக்காக இலக்கியப்படைப்புகளை இரண் டாகப் பிரிக்கலாம். அகம்நோக்கி எழுதக்கூடியவர்கள், புறம் நோக்கி எழுதக்கூடியவர்கள். இலக்கியம் எதுவானாலும் அது ஓர் அகநெருக்கடியில் இருந்தே உருவாகிறது. எத்தனை அக எழுச்சி இருந்தாலும் புனைவிலக்கியம் புறவுலகைச் சித்தரிக்கை யிலேயே நிகழமுடியும். அகமும் புறமும் கலந்ததே புனைவுகளம். வேறுபாடு அப் படைப்பாளி புனைவின் மையத்தரிசனத்தை எங்கிருந்து பெறுகிறார் என்பதை அடிப்படையாகக் கொண்டது.

தன் தரிசனத்தை புறநிகழ்வுகளில் இருந்து பெறும் படைப் பாளிகளை புறம்நோக்கி எழுதுபவர்கள் எனலாம். அவர்களின் எழுத்தில் சமூகவியலும் அரசியலும் முக்கியமான பங்குவகிக் கின்றன. தங்களைச் சூழ்ந்துள்ள வாழ்க்கையின் புறவயமான யதார்த்தங்களை நோக்கி அவற்றிலிருந்து பெற்றுக்கொண்ட வற்றைக் கொண்டு தங்கள் புனைவுகளை உருவாக்குபவர்கள் அவர்கள். ஆகவே சமூக அரசியல் சூழலை அறிவதற்காகவும் நாம் அவர்களின் படைப்புகளை வாசிக்கிறோம்.

ஆரம்பகால தமிழிலக்கியத்தில் அகநோக்கு எழுத்துக்கு ராஜம் அய்யர் உதாரணம் என்றால் புறநோக்கு எழுத்துக்கு மாதவையா உதாரணம். மாதவையாவைப் பின்பற்றி சமூக அவதானிப்புகளை எழுதிய எழுத்தாளர்களின் நீண்டவரிசை நம்மிடையே உள்ளது. அவர்களின் முதல் வரிசையினர் தேசிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள். இரண்டாம் வரிசையினர் இடதுசாரி இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்.

தேசிய இயக்கம் என்பது சமூகசீர்திருத்த நோக்குள்ளது. இருபதாம் நூற்றாண்டின் நவீன சுதந்திர ஜனநாயக நோக்கில்

நம்முடைய நிலப்பிரபுத்துவச் சமூகத்தை மாற்றியமைக்க அது முயன்றது. இனக்குழுத் தன்மைகளையும் வட்டாரத்தன்மை களையும் தொகுத்து இந்தியதேசிய அடையாளத்தை கட்ட மைக்கும் பணியைச் செய்யக்கூடியது. தமிழில் ஆரம்பகாலப் படைப்பாளிகள் பலரும் இவ்வகையினரே.

அதன்பின்னர் இங்கே முற்போக்கு இலக்கியம் உதய மானது. அது சமூகத்திலுள்ள சுரண்டலையும் ஒடுக்குமுறை யையும் முக்கியமாகக் கவனப்படுத்தியது. அதற்கு எதிரான எதிர்ப்பை உருவாக்கும் நோக்கு கொண்டதாகவும், அதற்காக சமூக உள்முரண்பாடுகளை வலுவாக முன்னிறுத்தக்கூடிய தாகவும் இருந்தது.

தேசிய இயக்க எழுத்தாளர்களில் கல்கி, ராஜாஜி போன்ற வர்கள் கட்சி சார்புடையவர்களாக இருந்தனர். நேரடி அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர். சங்கர்ராம், சி.சு. செல்லப்பா போன்றவர்களுக்கு அப்படி கட்சி சார்போ அரசியல் ஈடுபாடோ கிடையாது. அவர்களின் தேசிய இயக்கச்சார்பு என்பது அவர்கள் தங்கள் பார்வைகளில் உள்ளடங்கியிருந்தது. படைப் பில் உள்ளடக்கமாக மட்டும் வெளிப்பட்டது.

அதேபோல தமிழில் முற்போக்கு இலக்கியமரபில் தொ.மு.சி. ரகுநாதன், கு. சின்னப்ப பாரதி போன்றவர்கள் வெளிப்படையான கட்சிச் சார்பும் அரசியல் ஈடுபாடும் கொண்டிருந்தனர். ஜெயகாந்தன், பூமணி போன்றவர்களை உள்ளடக்கவகையில் முற்போக்கு எழுத்தாளர்கள் என்று சொல்லமுடியும். ஆனால், அவர்களுக்குக் கட்சியும் அரசியலும் இல்லை. முடிந்தவரை அத்தகைய நிலைப்பாடுகளைத் தவிர்க்கவும், விமர்சனநோக்குடன் அனைத்தையும் அணுகவும் முயன்றவர்கள் அவர்கள்.

மலையக இலக்கியத்தில் நடேசய்யரை தேசிய இலக்கிய மரபைச் சேர்ந்தவர் என்று அடையாளப்படுத்தலாம். தெளிவத்தை ஜோசப் அவரது பார்வை காரணமாக முற்போக்கு வகைமைக்குள் சேர்க்கப்படவேண்டியவர். ஆனால், கட்சி சார்போ அரசியல் நடவடிக்கையோ இல்லாதவர். வெளிப்படை யான கொள்கை முழக்கமோ கோட்பாடுசார்ந்த ஆராய்ச்சியோ இல்லாத புனைவுலகம் அவருடையது. ஆகவே வழக்கம்போல அவரை அங்குள்ள இடதுசாரியினர் தங்கள் பட்டியலில் சேர்க்க வில்லை என்பது மட்டுமல்ல அவர் தங்கள் அரசியல் நடவடிக் கைகளுடன் ஒத்துப்போகவில்லை என்பதற்காக அவ்வப்போது எதிரிகளின் பட்டியலிலும் சேர்த்திருக்கிறார்கள்.

உதாரணமாக, அவர்களின் புகழ்பெற்ற “காலங்கள் சாவதில்லை” என்ற நாவலில் தொழிற்சங்க அரசியல் விரிவாகப் பேசப்படவில்லை என்பதனால் அது இடதுசாரிகளின் பங்களிப்பை மழுங்கடிக்க முயலும் பிற்போக்குநாவல் என்று அங்கே சொல்லப்பட்டுள்ளது. தான் எழுதும் காலகட்டத்தில் இடதுசாரித் தொழிற்சங்க அரசியல் பெரியதாக வளர்ந் திருக்கவில்லை என அதற்கு தெளிவத்தை பதில்சொன்னார். இல்லை வளர்ந்திருந்தது என இடதுசாரிகள் வாதிட்டனர்.

இந்த வாதிடலே அபத்தம். ஒரு புனைவுக்குள் ஏன் ஒரு விஷயம் வந்தது அல்லது வரவில்லை என விவாதிப்பது சாத்தியமே அல்ல. தெளிவத்தை உருவாக்கிய யதார்த்தத்தில் அது இல்லை. அந்நாவலை வாசிக்கும்போது அது உருவாக்கும் கடுமையான வாழ்க்கைச்சித்திரத்தின் தீவிரத்தை தொழிற்சங்க அரசியல் பற்றிய விவரிப்பு இல்லாமலாக்கிவிடும் என்ற காரணத் தால் ஆசிரியரின் புனைவொருமை சார்ந்த பிரக்ஞை தொழிற் சங்க அரசியலை விட்டுவிட்டது என்றே நான் உணர்ந்தேன்.

ஆசிரியன் முதன்மையாகக் கொள்ளவேண்டியது புனைவுக்குள் உள்ள ஒருமையை மட்டுமே. புனைவுக்குள் உள்ள யதார்த்தமே அவன் முன்வைப்பது. அப்புனைவுக்குள் அது புனைவொருமையுடன் முன்வைக்கப்பட்டுள்ளதா என்பதே முக்கியம். அதற்கு வெளியே உள்ள யதார்த்தம் அளவுகோல் ஆகாது. வெளியே உள்ளதாக சொல்லப்படும் யதார்த்தமே கூட ஒருவகை அரசியல் வரலாற்றுப்புனைவே என்று ஆசிரியன் பதிலுரைக்கக்கூடும்.

தெளிவத்தை ஜோசப்பின் புனைவுலகின் அரசியலை ‘கோஷங்கள் அற்ற முற்போக்கு நோக்கு’ என்று சொல்லலாம். மார்க்ஸியம் இந்நூற்றாண்டு சிந்தனையாளனுக்கு அளித்துள்ள சமூக ஆய்வுச் சட்டகம் சில அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டது. சமூகம் சுரண்டுபவன், சுரண்டப்படுபவன் என்ற இருமையினால் ஆனது என்றும் உலகியல் வாழ்க்கையின் துயரங் களுக்கு இந்தச் சுரண்டலே முதன்மையான காரணம் என்பதும் முதல்கொள்கை. சமூக வாழ்க்கை என்பது சமூக அதிகாரங்களின் விளையாட்டரங்கு என்பது இரண்டாவது கொள்கை. இவ்விரண்டையும் பற்றிய பிரக்ஞையை அடைவது விடுதலையை அளிக்கும் என்ற நம்பிக்கை மூன்றாவது கொள்கை. இம்மூன்று கொள்கைகளின் அடிப்படையிலேயே தெளிவத்தை ஜோசப்பின் புனைவுலகம் இயங்குகிறது என்பதைக் காணலாம்.

தெளிவத்தை ஜோசப் பெரும்பாலும் மலையக மக்களின் ஒடுக்கப்பட்ட வாழ்க்கையின் அவலம் பற்றிப் பேசுகிறார். ஒடுக்கு முறையின் நுண்ணிய செயல்பாடுகளை பலகோணங்களில் சித்தரிக்கும் கதைகள் அவருடையவை. ஒடுக்குமுறையை புரிந்து கொள்ளவும் அதிலிருந்து மீளவும் செய்யப்படும் பலவீனமான முயற்சிகளை காட்டும் கதைகள். அந்த மக்களுடன் நாம் நம்மை அடையாளம் காணச்செய்வதே இவற்றின் நோக்கமாக இருக்கிறது.

இந்நூலின் முதன்மையான கதையாக உள்ளது மீன்கள். இதைத் தமிழில் எழுதப்பட்ட சிறந்த நூறு கதைகளில் ஒன்றாக நான் என்னுடைய நவீனத் தமிழிலக்கிய அறிமுகம் நூலில் குறிப் பிட்டிருந்தேன். மலையகத் தமிழர்கள் தேயிலைத் தோட்டங் களில் வாழும் வாழ்க்கையின் அழுத்தமான சித்திரத்தை சுருக்கமாக உருவாக்கிவிடுகிறது இக்கதை. பலவகையில் எனக்குள் விரிந்துகொண்டே இருந்த புனைவு இது.

இலங்கைத்தீவு என்றாலே இடுங்கலான குறுகிய இடம் என்ற மனச்சித்திரம் எனக்கிருந்தது. இக்கதை அதை மீண்டும் அளித்தது. தலைசாய்ப்பதற்கான இடத்துக்காக கெஞ்சி மன்றாடிப் போராடும் ஒரு தோட்டத்தொழிலாளரின் வாழ்க்கை இது. லாயம் என்று சொல்லப்படும் குறுகலான கொட்டடி. அதில் பிள்ளைகுட்டிகளுடன் நெருக்கியடித்து ஒண்டிக்கொள்கிறார்கள். அதன் மூலம் அவர்கள் இழப்பது அந்தரங்கத்தை.

அந்தரங்கம் இல்லாத வாழ்க்கை என்பது வாழ்க்கையே அல்ல. அது வெறுமே இருத்தல் மட்டுமே. முதலாளிக்கு வேலை செய்வதற்காக உடலை தக்கவைத்துக்கொள்ளுதல், அவ்வளவு தான். அந்த நிலத்தில் வாழ்ந்துசாகலாம், ஆனால், அதில் ஒரு அடியைக்கூட அவன் சொந்தமாக நினைக்கமுடியாது. ஒரு குடிசை கட்டிக்கொள்ளக்கூடாது. இன்னும் சற்று பெரிய 'காம்பிரா'வுக்காக கெஞ்சுகிறான். ஆனால், அதை அடைவதற் கான அதிகார விளையாட்டு அவனுக்குப் புரிவதே இல்லை.

சின்னஞ்சிறு கதைக்குள் ஓர் அரசாங்கம் செயல்படும் விதத் தையே சொல்லிவிடுகிறார் தெளிவத்தை. மூன்று அடுக்குகள் உள்ளன. துரைதான் ஆளும் வர்க்கம். கங்காணி அதிகாரி வர்க்கம். (Beurocaracy) ஆளும்தரப்பிடம் நேரடியாக முறையிட முடியாது. அது அதிகாரவர்க்கத்தை கைகாட்டிவிடும். அது ஆளும்தரப்பின் தந்திரம். கீழே இருப்பவர்களுடனான தொடர்புக்காக அல்ல, தொடர்பை முறிப்பதற்காகவே அது

அதிகாரவர்க்கத்தை வைத்திருக்கிறது. எதுவும் ஆளும்தரப்பு வரைச் சென்று சேராமல் அது பார்த்துக்கொள்கிறது.

அந்தச் சேவையின் ஊதியமாக அதிகாரவர்க்கத்துக்கு அளிக்கப்படுவது லஞ்ச ஊழலுக்கான உரிமை. ஆளும்வர்க்கம் லாபம் கொய்கிறது. அதிகார வர்க்கம் லஞ்சத்தைப் பெறுகிறது. இரண்டுமே உழைக்கும் வர்க்கத்திடமிருந்து சுரண்டப்படுகின்றன. அந்த லஞ்ச ஊழலின் ஒரு சிக்கலான தருணத்தை எப்படி நளினமாகக் கடந்துசெல்கிறது அதிகாரவர்க்கம் என்பதைக் காட்டும் கதை இது. அதிலும் கடைசியில் பலி உழைப்பாளிதான்.

ஆனால், இக்கதையை முதன்மையான கதையாக ஆக்குவது இதில் சொல்லாமல் சொல்லப்பட்டிருக்கும் அந்தத் தொழிலாளி யின் இழிவின் கணம்தான். சுயவதையாக அவனில் நீடிக்கும் ஒரு தருணம் அது. உண்மையில் அதனூடாக நான் அவனைப் பார்க்கவில்லை, அவனுடைய மகள்களையே பார்க்கிறேன். அவர்கள்தான் கடைசியாகச் சுரண்டப்பட்டவர்கள். ஒடுக்கப் பட்டவர்களின் கடைசிநிலையில் இருப்பவர்கள்.

பலகோணங்களில் திறக்கும் ஒன்பது முக்கியமான கதைகளின் தொகுதி இது. நம் மண்ணிலிருந்து உதிர்ந்து சென்ற நம் ரத்தங்கள் எப்படி வாழ்ந்தனர் எப்படிப் போராடினர் எப்படி எழுந்தனர் என்பதற்கான ஆவணம். ஆகவே, இது நமது வரலாறு.

ஜெயமோகன்

# உயிரின் போராட்டம்
## தெளிவத்தை ஜோசப்பின்
## *'மீன்கள்'*

சகோதரர்கள் இருவர் அக்கம்பக்கத்தில் வீடெடுத்துத் தத்தம் குடும்பத்துடன் தங்கியிருந்தார்கள். அவர்களுக்கிடையே இருந்த அறையில் சிலகாலம் நான் குடியிருந்தேன். இருவருக்கும் நாட்டுப்புறப் பாடல்களில் நல்ல பயிற்சியிருந்தது. ஏகப்பட்ட பாடல்களை மனப்பாடமாகச் சொல்வார்கள். இருவருக்கும் நல்ல குரலுமிருந்தது. அவர்களுடன் நெருங்கிப் பழக இதுவே காரணம். சாப்பாடெல்லாம் ஆனபிறகு மொட்டைமாடியில் எல்லாரும் சேருவோம். அவர்களுடைய பிள்ளைகளும் வருவார்கள். உடலைத் தழுவும் இதமான குளிர்க்காற்றில் நிலா வெளிச்சத்தில் அவர்கள் குரல் இனிமையாக ஒலிக்கும். ஒன்றிரண்டு மணிநேரங்கள் கூடப் பத்துப் பதினைந்து நிமிடங்கள் போலக் கரைந்துவிடும். உற்சாகத்தின் உச்சத்தில் சற்றே மிதமான போதையுடன் அவர்கள் பழைய கண்ணதாசன் பாடல்களைப் பாடத்தொடங்கினால் பசியெல்லாம் மறந்து போகும். தூங்கப்போகும் வரை அப் பாடல்வரிகள் மீண்டும் மீண்டும் நெஞ்சில் மிதந்தபடி இருக்கும்.

பெரியவருக்கு மூன்று பிள்ளைகள். சின்னவருக்கு நான்கு பிள்ளைகள். கூடமும் சமையலறையும் மட்டும் கொண்ட அவர்கள் வசிப்பிடங்கள் அவர்களுக்குப் போதுமானதில்லை. வசதிகூடிய இடத்துக்குச் செல்வதால் அதிகரிக்கக்கூடிய முன் பணத்தையும் வாடகையையும் அவர்களால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை. இங்கே ஒரு வீடு உள்ளதாம், முன்பணம் ஐம்பதாயிரம் கேட்கிறார்கள், அங்கே ஒரு வீடு உள்ளது நாற்பதாயிரம் கேட்கிறார்கள், தண்ணீர் வசதி இருக்கிறது. சின்னத் தோட்டம் கூட இருக்கிறது என்றெல்லாம்

அடிக்கடி பேசிக்கொள்வார்கள். கடைசியில் நமக்குத் தலையெழுத்து இந்த ஒண்டுக்குடித்தனம்தான் விதிக்கப்பட்டது போலும் என்று சிரித்துக்கொள்வார்கள்.

வீட்டுக்குச் சொந்தக்காரரர் பிடிக்கும் சீட்டுகளுக்கு ஏலம் விடும் நாள். சீட்டுக்கட்டுபவன் என்கிற வகையில் நானும் நின்றிருந்தேன். பெரியவர் வந்திருந்தார். எழுபத்தைந்தாயிரம் ரூபாய் சீட்டு. கேள்விகள் தொடங்கின. ஐந்நூறு ஆயிரம் என்று பத்தாயிரம் ரூபாய்வரை வேகவேகமாக வந்த கேள்விகள் பிறகு நிதானமடைந்தன. என் எல்லை ஏழாயிரம் என்று முதலிலேயே வகுத்துக்கொண்டிருந்ததால் நான் மேற்கொண்டு கேட்காமல் கேட்பவர்களை வேடிக்கை பார்த்தேன். பெரிய சகோதரருக்கும் மற்றொரு வியாபாரிக்கும் இடையே போட்டியிருந்தது. தயங்கித் தயங்கி ஆயிரம் ஆயிரமாக மாற்றி மாற்றி அதிகரித்துக்கொண்டிருந்தார்கள்.

திடீரென புயல்போல சின்ன சகோதரர் அரங்குக்குள் நுழைந்தார். வந்த வேகத்தில் கேட்கப்பட்ட கேள்வியைவிட ஆயிரம் ரூபாய் கூட்டினார். பெரிய சகோதரர் தயக்கத்துடன் மேலுமொரு ஆயிரம் சேர்த்துச் சொன்னார். இப்போது அந்த வியாபாரி போட்டியிலிருந்து விலகிவிட்டார். இரண்டு சகோதரர்களுக்கிடையேதான் போட்டி என்பது தெளிவாகிவிட்டது. இருபதாயிரத்தைத் தொட்டுவிட்டது கேள்வி. ஆனாலும் விடாமல் இருவரும் தொடர்ந்தார்கள். இருவரும் ஒருவரையொருவர் வன்மத்துடனும் எரிச்சலுடனும் பார்த்துக்கொண்டனர். சின்ன சகோதரரின் கண்களில் பொங்கிய நெருப்பைக் காண அஞ்சி பெரியவர் கேள்வியை நிறுத்திக்கொண்டார். இருபத்தோராயிரம் ரூபாய் தள்ளி சீட்டையெடுத்தார் சின்ன சகோதரர்.

அன்று இரவு மொட்டைமாடியில் இருவருக்குமிடையே கடும் வாக்குவாதம். 'நீ எடுப்பதாகச் சொல்லியிருந்தால் நான் கேட்டே இருந்திருக்க மாட்டேனே' என்பது பெரியவர் வாதம். 'உங்களுக்குத் தேவை என்று முதலிலேயே சொல்லியிருந்தால் நான் வந்திருக்கவே மாட்டேனே' என்பது சின்னவரின் வாதம். அரைமணிநேரப் பேச்சுக்குப் பிறகு பேச்சு நிதானகதியை அடைந்தது. அன்றைய இரவு ஒலிபரப்பான நேயர் விருப்பத்தில் இடம்பெற்ற பழைய பாடல்கள் இருவருடைய சூட்டையும் தணித்துவிட்டது. அடுத்தத் தெரு தள்ளி வாடகைக்கு ஒரு வீடு பார்த்துவிட்டு வந்ததாகவும் அதற்கு முன்பணம் தர கூடுதலாக ஐம்பதாயிரம் ரூபாய் தேவைப்பட்டதென்றும் அந்த விளம்பரப் பலகையைத் தாமதமாகத்தான் பார்க்க நேர்ந்ததென்றும் அதனால்தான் தொடக்கத்தில் சீட்டு எடுக்கிற திட்டமில்லை

என்றாலும் பாதியில் ஓடோடி வந்து கேட்டதாகவும் சொன்னான்.

பெரியவர் வானத்தைப் பார்த்துச் சிரிசிரியென்று சிரித்தார். 'அசடா அசடா' என்று தம்பியைப் பார்த்துச் சொன்னார். தான் சீட்டெடுக்க நினைத்ததும் அதே காரணத்துக்குத்தான் என்று மெதுவாகச் சொன்னார். அருகில் நின்றிருந்த எனக்கும் சிரிப்பு வந்தது. எங்கோ வலுத்துவிடுமோ என்று அஞ்சியிருந்த மோதல் தவிர்ந்துபோனதில் நிம்மதியாக இருந்தது. ஒரு தேவையை முன்னிட்டுத் தன்னுடன் போட்டி போடுபவன் சகோதரனேயானாலும் தானே வெல்ல வேண்டும் என்கிற எண்ணம் வலிமைகொள்கிற தன்மை எனக்கு வியப்பாக இருந்தது. இதுதான் உயிர் வாழ்வதற்கான போராட்டத்தின் இயல்பு போலும் என்று எண்ணிக்கொண்டேன். கூடவே தெளிவத்தை ஜோசப் என்னும் இலங்கை எழுத்தாளர் எழுதிய 'மீன்கள்' என்னும் சிறுகதையையும் மனத்துக்குள் அசை போட்டுக்கொண்டேன்.

காலமெல்லாம் ஒற்றையறைக்குள் ஆறேழு பிள்ளைகளுடன் குடித்தனம் செய்பவர்களின் அவஸ்தையைச் சொல்வதிலிருந்து தொடங்குகிறது கதை. இக்கட்டுகளின் உச்சமாக நடந்துவிட்ட சம்பவத்தையொட்டி எழுந்த பதற்றத்துடனும் குற்றஉணர்ச்சி யுடனும் குளிரையும் பொருட்படுத்தாமல் அறையைவிட்டு வெளியேறுகிற கணவனுடைய தத்தளிப்பு கதையின் தொடக்கத் திலேயே நம் கவனத்தை ஈர்த்துவிடுகிறது. கசப்பான ஞாபகம் அது. ஆனாலும் விலக்கித் தள்ளத்தள்ள அதுவே மனத்தில் நிறைகிறது.

நடந்தது இதுதான். இரவு பத்துமணிக்குமேல் வேலையி லிருந்து திரும்பியவன், மெதுவாகக் கதவைத் திறந்து மூடிவிட்டு இருளுடன் இருளாகக் கதவோரமாக ஒருநொடி நேரம் நின்று கண்களைப் பழக்கப்படுத்திக்கொள்கிறான். கம்பளிக்குள்ளும் சேலைக்குள்ளும் சுருட்டிக்கொண்டு உறங்கும் உருவங்கள் இருட்டில் லேசாகத் தெரியத்தொடங்குகின்றன. முகத்தை மூடிக் கொண்டு உறங்கும் உருவங்களிடையே உருவஅமைப்பை அடையாளமாகக்கொண்டு தன் மனைவி உறங்கும் இடத்தைக் கண்டறிகிறான். போதை, களைப்பு எல்லாம் சேர்ந்து அவனை வாட்டுகிறது. எழுப்பப்பட்ட உருவம் முகத்தைக் காட்டியதும் நெருப்பை மிதித்ததைப்போல ஆகிவிடுகிறது. அவனுடைய கணிப்பு தவறிவிடுகிறது. அது மனைவி அல்ல, மகள். அதே கணத்தில் தீப்பெட்டி உரசலைத் தொடர்ந்து விளக்கும் கையுமாக எழுந்துவிடுகிறாள் மனைவி. அந்த வெளிச்சத்தில் யாரையும் நிமிர்ந்து பார்க்கும் திராணியில்லாமல் கிள்ளப்பட்ட

கொழுந்தாய் தலைதொங்க வெளியேறுவதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை. வீட்டுக்கு வெளியே நிற்கும்போதும் அவன் மனம் அமைதியடையவில்லை. ஒருக்களித்திருக்கும் கதவினூடாக கோடாக நீளும் வெளிச்சத்திலிருந்து உள்ளே இன்னும் நிலைமை சீராகவில்லை என்பது புரிகிறது. எந்த நொடியிலும் யாராவது ஒருவர் உள்ளேயிருந்து வெளிப்பட்டுத் தன்முன் வந்து நிற்கலாம் என்கிற பயத்தைத் தவிர்க்க முடியவில்லை. அவசரத்தில் அங்கிருந்து வெளியேறுகிறான்.

எல்லாப் பிரச்சனைகளுக்கும் காரணம் அவன் குடியிருக்கும் வீடு. வீடு கூட அல்ல அது. ஓர் அறை. நான்கு சுவர் கொண்ட ஒரு சதுரம். ஆறு சதுரங்கள் கொண்ட அக்குடியிருப்பில் இருபதாண்டுகளுக்கு முன்னால் அவனுக்கு ஒதுக்கப்பட்ட இடம். குடிவந்தபோது மனைவியும் மூன்று குழந்தைகளும் இருந்தார்கள். இப்பொழுது ஆறு பிள்ளைகள். வயதில் மூத்தவர்கள். மாற்று இடத்துக்காக அவனும் எத்தனையோ தடவை அலுவலகத்துக்குச்சென்று துரையிடம் காலில் விழாத குறையாகக் கெஞ்சியும் சண்டையிட்டும் பார்த்துவிட்டான். பெரிய கங்காணியின் பக்கம் கையைக் காட்டுவதைத் தவிர துரை வேறெதுவும் செய்யவில்லை. கங்காணியிடமும் கோரிக்கையை முன்வைத்தாயிற்று. ஆனால், ஒன்றும் பலிக்கவில்லை. அவன் உருவம் அலுவலகத்தின் பக்கம் தென்பட்டாலேயே அது வீடுவேண்டிய கோரிக்கையுடன்தான் என்று எல்லாருக்கும் தெரியும் அளவுக்கு அவன் விடாமுயற்சி மேற்கொள்கிறான். ஆனாலும் எதிர்பார்த்த பயன் இல்லை. குடியிருப்பில் சற்றே அளவு கூடிய வீடுகள் காலியாகும் போதெல்லாம் அது வேறு யார்யாருக்கோ ஒதுக்கப்பட்டு விடுகிறது. அவன் கோரிக்கையைக் கவனிப்பார் இல்லை.

இடையில் அவனுக்கு இரவுக் காவல்வேலை ஒதுக்கப்படுகிறது. தற்காலிகமாக அவன் பிரச்சனையிலிருந்து தப்பிக்கிறான். கொஞ்ச காலம்தான். மறுபடியும் வேலைமுறை மாறிவிடுகிறது. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில்தான் மேற்சொன்ன இக்கட்டில் அகப்பட்டுக்கொள்கிறான். தன் இயலாமையை மனத்துக்குள் நொந்தபடி நடந்துகொண்டே இருந்தவனுக்கு தோட்டத்தில் வேலைசெய்கிற பண்டா என்பவன் குடியிருப்பைக் காலிசெய்துவிட்டு சொந்தவீட்டுக்குச் செல்லும் செய்தி காதில் விழுகிறது. அக்குடியிருப்பு சற்றே அளவில் பெரியது. எப்படியாவது அவ்வீட்டைத் தனக்கு ஒதுக்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்துடன் வேகவேகமாகக் கங்காணியிடம் சென்று மறுபடியும் கோரிக்கையை முன்வைக்கிறான்.

வீடுகள் காலியாகும்போதெல்லாம் அவனுக்குக் கிட்டாத தற்குக் காரணம் பெரிய கங்காணியை மகிழ்ச்சிப்படுத்த ஒரு போத்தல் சாராயம் வாங்கித்தராமைதான் என்று மற்ற நண்பர்கள் அவனுக்கு எடுத்துரைக்கிறார்கள். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போய்விடக்கூடாது என்பதற்காக மனத்துக்குப் பிடிக்காவிட்டாலும் காரியம் சாதிப்பதற்காக சாராயம் வாங்கி வைத்துக்கொள்கிறான். வீடு ஒதுக்கப்படும் தினம் கொடுத்து மகிழ்ச்சிப்படுத்திவிடலாம் என்பது அவன் எண்ணம்.

இப்போதுதான் புதிய பிரச்சனை ஒன்று முளைக்கிறது. இவனைப்போலவே வீட்டின் தேவை உள்ள மற்றொரு தொழிலாளி ஒருவன் இதே கோரிக்கையோடு பெரிய கங்காணி யைக் கண்டு பேசுகிறான். பேசச்செல்லும் அன்றே இரண்டு சாராயப்போத்தல்களோடு செல்கிறான். வீடு அவனுக்கு ஒதுக்கப்பட்டு விடுகிறது.

பண்டா குடிபெயரும் தினம். தாளில் சுற்றிய போத்தலோடு கங்காணியின் வீட்டுக்குச் சென்றவன் அங்கே அவருடன் மற்றொருவன் இருப்பதைக் கண்டு தயங்கி நிற்கிறான். அவனை வரவேற்கிற கங்காணி கையில் இருப்பது என்ன என்று கேட் கிறான். அவன் தயங்கத்தயங்க அதை இழுத்துப் பார்க்கிறான். சாராயப்போத்தலைப் பார்த்ததும் அவன் முகம் இருளடை கிறது. மற்றவர்கள் முன்னிலையில் லஞ்சம்தரத் துணிந்த அவன் மீது சீற்றமடைகிறான். வீட்டை ஒதுக்க லஞ்சம் கொடுக்க வந்தியாடா என்று அவனை அதட்டி மூச்சுவிடாமல் கத்து கிறான். வெலவெலத்துப்போய் நடுங்கும் கால்களுடன் வெளியே நடக்கிறான் அவன்.

கங்காணி, தொழிலாளி என இருமுனைகளைக் காட்டி வீட்டின் பிரச்சனை பேசப்பட்டிருந்தால் இது ஓர் எளிய சூத்திரத்தின் பாற்பட்ட கதையாக மாறியிருக்கும். மாறாக, ஒரு தொழிலாளிக்குக் கிடைக்கவிருந்த வீட்டைத் தனக்காக ஒதுக்கி வாங்கிக்கொள்பவன் மற்றொரு தொழிலாளி. இதன் பொருள் தொழிலாளிக்கு எதிரி தொழிலாளி என்பதல்ல. தொழிலாளியும் ஒரு மனிதன். விரும்பியோ விருப்பமில்லாமலோ மனித உயிர் தன் இருப்புக்காக எல்லாவிதமான காரியங்களையும் செய்ய வேண்டியிருக்கிறது. தான் முன்னேற சக மனிதர்களையே கீழே நெட்டித் தள்ளுகிறது. ஏறத்தாழ தட்டிப்பறிப்பதற்குச் சமமான செயலையும் செய்யத் தூண்டுகிறது. பெரிய மீன் சின்ன மீனை உண்டுதான் உயிர்வாழ நேர்வதைப்போல ஒருவருடைய வாய்ப்பைப் பறித்தே மற்றொருவர் வாழும் நிலைமை உருவாகி

விடுகிறது. உயிரின் போராட்டம் அத்தகையது. இப் போராட்டத்தின் சிறுபொறியொன்றை இக்கதை கோடிட்டுக் காட்டுவதாலேயே முக்கியமான கதையாகிறது.

*

மலையகப் படைப்பாளிகளில் முக்கியமான ஒருவர் தெளிவத்தை ஜோசப். அறுபதுகளில் எழுதத்தொடங்கி எழுபது களில் இலக்கிய உலகில் தனித்துவம் மிகுந்த படைப்பாளியாக மலர்ந்தவர். சாதாரணத் தோட்டத்தொழிலில் அல்லாடிக் கொண்டிருக்கும் தொழிலாளிகளைப்போன்ற உதிரி மனிதர் களைப் பாத்திரங்களாகக் கொண்டவை இவரது படைப்புலகம். வைகறை வெளியீடாக 1979 ஆம் ஆண்டில் வெளிவந்த 'நாமிருக்கும் நாடே' என்னும் தொகுப்பில் 'மீன்கள்' என்னும் இக்கதை இடம்பெற்றுள்ளது. 'காலங்கள் சாவதில்லை' என்பது இவருடைய முக்கியமான நாவல்.

பாவண்ணன்

# பொருளடக்கம்

## மீன்கள்

தீப்பெட்டியின் உரசலைத் தொடர்ந்து விளக்கும் கையுமாய் நின்றுகொண்டிருந்த மனைவியைக் கண்டதும் பதறிப்போனான்.

மதுவின் போதையும் மற்ற மயக்கங்களும் உயிர்நாடியில் விழுந்த அடியால் ஓடிப்போக, குப்பி விளக்கின் கொஞ்ச வெளிச்சத்தில் நிலைமையைப் புரிந்துகொண்டவன், யாரையும் நிமிர்ந்து பார்க்கும் திராணியற்று கிள்ளிய கொழுந்தாய் தலை தொங்கிப்போய் உட்கார்ந்திருந்தான்.

வெலவெலத்துப்போய் குனிந்த தலை நிமிராமல் ஒரு வினாடி உட்கார்ந்து இருந்தவனுக்கு கழிந்துவிட்ட அந்த ஒரு வினாடியே ஒரு யுகமாகத்தோன்ற வெறும் தொண்டைக்குள் காற்றை விழுங்கியபடி விருட்டென்று எழுந்தான்.

எழுந்த பிறகு மறுபடியும் குனிந்து தனது போர்வையை எடுப்பதன் மூலம் இக்கட்டான அந்த இடத்தில் இன்னொரு வினாடி இருக்க நேரிடுமே என்ற உழைவில், கம்பளியை எடுத்துக்கொண்டே எழுந்தவன், அதை இழுத்துத் தோளில் எறிந்தவாறு வெளியே நடந்து இஸ்தோப்பின் இருட்டில் அமர்ந்துகொண்டான்.

தூண்தூணாய் நிற்கும் மரங்களிடையே தூரத்தில் தெரியும் மலைச்சரிவுகள் கருப்பு வண்ணத்தால் தீட்டி மாட்டிய ஓவியங்கள் போல் தெரிகிறது.

கண்ணுக்கெட்டிய தூரம்வரை கருங்கும்மென்று கிடந்த கறுப்பையே வெறித்து நோக்கிக்கொண்டிருந்தவன் இருட்டிய உலகின் அத்தனை அந்தகாரத்தையும்விட தன் மனதின் அந்த காரம் அதிகமானதாக தனக்கே தெரிவதை உணர்ந்து அதன் கனம் தாளாது தனிமையாக அமர்ந்திருக்கும் அந்த நேரத்திலும் தலையைக் கவிழ்த்துக்கொள்கிறான்.

ஆனால், மனதின் இருட்கனத்தால் தானாகவே கவிழ்ந்து விடும் தலையை எந்த அணையைக்கொண்டு நிமிர்த்தி வைப்பது?

'கசமுச'வென்று உள்ளே ஏதோ பேச்சு கேட்கிறது.

உயர்ந்த தோளிடை தொங்கும் தலையை ஒரு சிறிதும் உயர்த்தாது மிகவும் சிரமத்துடன் பக்கவாட்டில் திரும்பி ஓரக் கண்ணால் உள்ளே பார்க்கிறான்.

ஒருக்களித்திருக்கும் கதவினூடாக உள்ளே இருக்கும் வெளிச்சம் கோடாக நீளுவதிலிருந்து உள்ளே இன்னும் நிலைமை சீரடைந்து அமைதியாகவில்லை என்பதைப் புரிந்து கொண்டவன், உள்ளேயிருந்து யாராவது ஒருவர் தன்முன்னால் எந்த வினாடியும் வந்து நிற்கலாம் என்ற பயத்தில் அப் போதைக்குத் தப்பிக்கொண்டாலே போதும் என்ற அவசரத்தில் இஸ்தோப்பிலிருந்து இறங்கி இருளில் நடந்தான்.

லயத்துக்கோடியில் கிடந்த நாய், அரவம் கேட்டு குரைக்க வாயெடுத்து அவனை இன்னாரென்று கண்டுகொண்டு குரைப்பை ஏப்பமாகவோ ஊளையாகவோ மாற்றிச் சமாளித்து கொட்டாவியுடன் முன் காலை நீட்டி சோம்பல் முறித்துவிட்டு வாலை ஆட்டியபடி மீண்டும் சுருட்டிக்கொண்டது.

எங்கோ உச்சியிலிருந்து ஓடிவந்து இரண்டு பாறைகளுக் கிடையில் விழுந்தோடும் நீர்வீழ்ச்சி எழுப்பும் 'சோ' எனும் பேரிரைச்சலைத் தவிர்த்து முழுத்தோட்டமுமே இருட்டைப் போர்த்திக்கொண்டு குறட்டைவிட்டது.

இரவு பதினொரு மணி. பயங்கரத் தனிமையில் இந்த நாற்பத் தெட்டு வயதிலும் உருவத்தில் குனிவோ நடையில் தளர்ச்சியோ இல்லாமல் எங்கே போகின்றோம் என்ற கட்டுப்பாடற்ற ஏதேட்சையுடன் நடந்துகொண்டிருந்தவன் முகத்தில் பாய்ந்து

கண்ணை மயங்கச் செய்த 'டோர்ச்' லைட்டின் ஒளியால் நின்றான்.

'என்ன பெரியப்பா இந்த ராவுலே...' உரப்பட்டிக் காவல் செய்பவன்தான் லைட்டும் கையுமாய் நின்றான்.

'தூக்கம் வரல்லேடாப்பா.... ஒரே புளுக்கமாக் கெடந்திச்சு. அதுதான் இப்பிடிக் காத்தாட...'

புளுக்கம் மனதில் என்பதைப் புரிந்துகொள்ளாதவனாக, 'இப்படி இந்த உரப்பட்டி விறாந்தையில் படுத்துக்கிறேன். காத்தோட்டமாக இருக்கும்' என்கிறான்.

தூக்கம் தாங்காமல் கண் மயங்கும் வேளைகளில் ஒரு வாய் தேநீர் சுடவைத்து ஊற்றிக்கொள்வதற்கும் குளிர் தாங்காமல் பல்லடிபடும் வேளையில் நெருப்புப் போட்டுக் குளிர் காய்வதற்குமாக விறாந்தை மூலையில் காவல்காரர்கள் போட்டு வைத்திருக்கும் கரி பிடித்த மூன்று கற்களில் ஒன்றை இழுத்து விரிக்கும் போர்வையில் ஒரு முனையை அதன்மேல் போட்டு கரியை மறைத்து அந்த உயரத்தில் தலையை வைத்து மல்லாந்து படுத்துக்கொண்டான்.

தேயிலைத் தளிர்களில் மிதந்து வரும் காற்று திறந்த வெளியில் கிடக்கும் உடலைத் தழுவி ஓடுகையில் எத்தனையோ சுகமாகவும் லேசாகவும்தான் இருக்கிறது. என்றாலும் உள்ளம் பாரமாகவும் சூடாகவும் இருக்கையில் எப்படி நித்திரை வரும்.

சினிமாப் பாட்டொன்றை சீட்டியில் ஒலித்தபடி காற்றை வீசிக்கொண்டபடி உரக் காம்பிராவின் மறு முனைக்கு நடந்தான் காவல்காரன்.

வீட்டில் நிகழ்ந்துவிட்ட அசம்பாவிதத்திற்கு முழுமுதற் காரணமும் தான் தானென்றாலும் தன்பக்கம் ஏதாவது நியாயம் இருக்கிறதா என்று பார்த்துக்கொள்வதற்காக நடந்துவிட்டதை மீண்டும் ஒரு முறை நினைவுபடுத்திப் பார்க்கிறான்.

கசப்பானதுதான்! ஆனால், கட்டாயம் நினைவுபடுத்திக் கொள்ளவும் வேண்டியிருக்கிறது.

எத்தனை அசிங்கமானது எல்லாம் நடந்துவிடுகிறது....!

இரவு பத்துமணிக்குப் பிறகு நாட்டிலிருந்து திரும்பியவன் மெதுவாகக் கதவைத் திறந்து மூடிவிட்டு இருளுடன் இருளாக கதவடியில் ஒரு வினாடி நின்று கண்களை பழக்கப்படுத்திக் கொண்டான்.

கம்பளிக்குள்ளும் சேலைக்குள்ளுமாக சுருட்டிக்கொண்ட உருவங்கள் இருட்டில் லேசாக தெரியத் தொடங்கின.

நாட்டிலிருந்து வந்திருக்கும் மயக்கத்துடன் இருட்டில் காலை உயர்த்தி முதலில் கிடந்த உருவத்தை தாண்டியபடி 'அதோ அதுதான் அவ' என்று மனதிற்குள் முனகிக்கொண்டான்.

அவனுடைய கணிப்புத் தவறிவிட்டது. 'அது மகள் இந்தப் புள்ளை எப்பிடி சேச்சே...' என்று எச்சிலை விழுங்கிக் கொண்டவன் அருவருப்பான அந்த எண்ணங்களை வெட்டித் துண்டாக்கிக்கொண்டான்.

அந்த ஆறு காம்பிராலயத்தின் மூன்றாவது காம்பிராவுக்குள் அவன் பிரவேசம் செய்து ஏறத்தாழ இருபது வருடம் இருக்கும். அப்போது அவனுடைய மனைவியும் மூன்று பிள்ளைகளுமாக ஐந்து பேர்களுக்கு அந்த ஒரு காம்பிரா போதுமானதாக இருந்தது.

நான்கு சுவர் உள்ள அந்தச் சதுரத்துக்குள் அடுப்பைப் போட்டு 'இது குசினி' என்று ஒரு பகுதியை ஒதுக்கிவிட்டு மிஞ்சியிருக்கும் முக்கால் அறைக்குள் மூன்று பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு அவைகள் கண்டும் காணாமலும் சம்சாரம் பண்ணி இன்னும் மூன்றைப் பெற்றுக்கொண்டது வரை எல்லாம் அந்த ஒரே காம்பிராதான்.

அவனும் எத்தனையோ தடவை ஆபீசுக்குப்போய் துரையிடம் காலில் விழாக்குறையாகக் கெஞ்சியும் சண்டை போட்டும் பார்த்துவிட்டான், தனக்கு இன்னொரு காம்பிரா வேண்டுமென்று.

பகல் வேளைகளில் வீடு இருக்கிறதா இல்லையா என்ற பிரச்சனையே கிடையாது. எல்லாத் தொல்லைகளும் இரவில் தான். அத்தனையையும் படுக்கவைத்தாக வேண்டுமே! கைகால் முளைத்துவிட்ட பிள்ளைகள் என்றாலும், இடநெருக்கடி என்று வெளியே எங்கேயாவது போய் சுருட்டிக்கொள்ளும். முளைக்கும் மீசையை நாசுக்காக நீவிவிட்டபடி படுக்கையும் தானுமாக நடந்துவிடுகிறானே மூத்த பையன், 'நண்பனுடன் படுத்துக் கொள்ளுகிறேன் என்று. அதேபோல் இந்தச் சின்னஞ் சிறுசுகள் எங்கே போகும்?

வீடு வளரவில்லை என்பதற்காக பிள்ளைகளும் வளராமல் இருந்துவிடுவார்களா? அதுவும் பெண் பிள்ளைகள்!

'பெண் வளர்ச்சி பேய் வளர்ச்சி என்பார்கள்' பார்த்துக் கொண்டிருக்கும்போதே வளர்ந்துவிடுவார்கள்.

இவன் வீட்டிலும் இரண்டு வளர்ந்துபோய் இருக்கின்றதே. அது எங்கே போய் படுத்துக்கொள்ளும்.

மூத்த பையனைத் தவிர மற்றது அத்தனையும் அந்த முக்கால் அறைக்குள் 'ஒண்ணடிமண்ணடியாக' உருள வேண்டியதுதான். இந்த லயப்பிரச்சனை பெரும் தலை வேதனையாக உருமாறிக்கொண்டு வருகிறது என்று கண்டவுடன் துரை நைசாக நழுவிக்கொண்டார்.

யார் யார் எந்தெந்த லயத்தில் இருக்கிறார்கள்? ஒரு காம்பிராவில் எத்தனை பேர்? பெண் எத்தனை? ஆண் எத்தனை? என்பது போன்ற விபரங்களை காட்டும் 'லயத்துச் செக்ரோலை' தூக்கிப் பெரிய கங்காணியிடம் கொடுத்துவிட்டார்.

தொழிலாளர்களின் நலனில் மிகுந்த அக்கறை உள்ளவராகத்தான் இருந்தாக வேண்டும் கங்காணி என்பவர். தொழிலாளரின் நலனில்தான் இருக்கிறது அவருடைய நல்வாழ்வு.

துரையிடம் இல்லாத ஒரு பயம், துரையிடம் காட்டாத ஒரு மதிப்பு, துரைக்குக் காட்டாத ஒரு ஒத்துழைப்பு பெரிய கங்காணியாகப்பட்டவருக்கு உண்டு என்பது துரையின் நம்பிக்கை. ஆகவே நெருக்கடிமிக்கதான இந்த வீட்டுப் பிரச்சனையை அவரிடம் நீட்டிவிட்டு ஒதுங்கிக்கொண்ட துரை சாமர்த்தியசாலிதான். தனக்கு லயம் போதாது என்பவர்கள் துரையிடம் போவார்கள். துரை பெரிய கங்காணியிடம் அனுப்புவார். கங்காணி அவர்களை விசாரித்து பெயர்களை எழுதிக்கொண்டு லயம் ஏதாவது காலியானால், இல்லாட்டி புது லயம் கட்டினால் உனக்குச் சொல்கிறேன் 'போ' என்பார்.

'என் வீட்டில் ரெண்டு கொமரோட இன்னும் ஆறுபேர் இருக்கோமுங்க' என்று கூறிக்கொண்டு நின்ற இவனையும் பெரிய கங்காணிகிட்டே போ' என்றார் துரை.

'அவங்ககிட்ட ஏன் நான் போவனும், துரை நீங்க இருக்கீங்க தகப்பன் மாதிரி, நீங்க பார்த்து காம்பிரா ஒழுங்கு செய்யுங்க' என்று ஆபீசில் சத்தம் போட்டாலும், படி இறங்கியதும் நேராகப் பெரிய கங்காணியிடம் போகவும் தவறவில்லை.

'போ பார்ப்போம்' என்று கூறி வைத்தார் பெரிய கங்காணி. வரப்பிரசாதம் போல் அவனுக்கு காவல் வேலை கிடைத்தது.

அதன் பிறகு உரப்பட்டி, புது மலை, ஆயுதக் காம்பிரா என்று எங்காவது இராப்பொழுதை போக்கிவிடுவான். வீட்டுப்பிரச்சனை அவ்வளவாகத் தோன்றவில்லை.

தான் ஒதுங்கிக்கொள்வதால் மட்டும் தீர்ந்துவிடும் தொந்தரவு இல்லையே குடும்பத் தொந்தரவு! அது தொடர்ந்து கொண்டே இருந்தது.

மனைவியின் நச்சரிப்புத் தாளாத போதெல்லாம் துரை யிடம் போவான். துரை 'கங்காணியிடம் போ' என்பார். கடபுடா என்று கத்திவிட்டு திரும்பி வருவான்.

அவன் படியேறும்போதே துரை மனதிற்குள் சிரித்துக் கொள்வார். 'சலாங்கையா' என்று ஜன்னலிடம் வரும்போதே 'கங்காணிகிட்டே போ' என்று கூறிவிடுவார். ஒரு தடவை அவன் வேறு எதற்காகவோ வந்து நின்று 'சலாங்க' என்றபோது 'கங்காணிகிட்டே போ' என்று துரை கூற 'நான் லயத்துக்கு வரலிங்க' என்று அவன் தலையைச் சொறிய... துரை, கிளார்க், அவன் மூவருமே சிரித்துவிட்டனர் தங்களைக் கட்டுப் படுத்திக்கொள்ள இயலாமல்.

அவன் ஆபீசுக்கு வந்தால் லயம் கேட்கத்தான் வருவான் என்பதும் லயம் கேட்டால் 'கங்காணிகிட்டே போ' என்றுதான் துரை கூறுவார் என்பதும், அந்தளவுக்கு துரைக்கும் அவனுக்கும் தெளிவான ஒன்றாகிவிட்டது.

அவனுக்கு கிடைத்திருந்த காவல் வேலையும் நின்றுவிட்டது. மறுபடியும் அவன் நேரடியாகப் பிரச்சனைக்குள் அகப்பட்டுக் கொண்டான். அதன் விளைவு,

அடுத்தநாள் அந்தி நேரத்தில் பெரிய கங்காணி வீட்டுக்குப் போனான்.

'ஏன் தொரைகிட்ட போவலியா?' பெரிய கங்காணி குத்தலாகக் கேட்டார்.

'அதெல்லாம் ஒண்ணுமில்லிங்க?' அவன் குழைந்தான்.

'இல்லை, ஐயா நேரே ஆபீசுக்குப் போய் துரைகிட்டத் தானே கம்பிளேன் பண்ணுவீக அதுதான் கேட்டேன்.' அவனுக்கு விளங்கிவிட்டது. ஐயா அவனை அடையாளம் பண்ணித்தான் வைத்திருக்கிறார் என்பது. புதிதாகக் கட்டிய பத்துக் காம்பிராவில் தனக்கு ஒரு காம்பிரா கிடைக்காமல்

போனதற்கும் அவ்வப்போதும் காலியாகும் பழைய காம்பிராக் களும் தன்னை ஒதுக்கிவிட்டதற்கும் இந்த அடையாளம்தான் காரணமோ...!

சாமிக்கு ரெண்டுன்னா பூசாரிக்கு நாலு தேங்காய் ஒடைக்கணும் போலிருக்கே! என்று புழுங்கியபடி ஐயாதான் ஒதவி செய்யணும் என்று காலில் விழாத குறையாகக் கூறிவிட்டு நடந்தான். 'என்னா இந்த நேரத்தில் கங்காணி வீட்டுப் பக்கம்....'

'அதையேன் கேட்கிறே; நானும்தான் நாளாய்ப் பொழுதாய் நாய் கணக்கா அலைஞ்சு பார்க்கிறேன் ஒரு காம்பிராவிற்கு. மனுசன் அசையுறாப்பிலே காணாமே. பார்ப்போமிங்கிறாரு நாமும் பார்த்துக்கிட்டிருக்க வேண்டியதுதான்.'

'லயம் ஏதும் காலியானால் இன்னொருத்தனுக்குப் போயிறுது.... அதைத்தானே சொல்லவாரே...'

'பின்னே என்னாங்கிறேன்...'

'லேய் சும்மா கத்தாதறேலே... வெறுங் கையி மொழம் போடுமா... ஒரு காம்பிராவிலே ஏழெட்டை அடைச்சுக்கிட்டு கஸ்டப்படுகிறதைவிட கங்காணிக்கு ஒரு போத்தல் சாராயத்தை வாங்கிக் கொடுத்திட்டா என்னா கெட்டுப்புடுது... என்ன கொறைஞ்சுப்புடுது.

ஒரு போத்தல் சாராயத்தை வாங்கித் தொலைத்து விடுவதால் ஒன்றும் குறைந்துவிடாது என்பது அவனுக்குத் தெரியும். ஏன் கொடுக்கவேண்டும் என்ற வீம்பில்தான் இத்தனைநாளும் இருந்தான்.

ஆனால், இப்போது...!

'எந்த எளவைக் கொடுத்தாவது ஒரு காம்பிரா கேட்டாகணும்.' மனம் முனகிக்கொள்கிறது.

'அந்தக் கொய்யாமரத்தடியிலே அப்பவே ஒரு குடிசை போட்டேன்....'

மனதை அவன் அடக்கப்பார்த்தாலும் நடந்துவிட்ட கசப்பான நிகழ்ச்சிக்கான காரண காரியங்களைச் சுற்றியே அது ஓடுகிறது.

லயம் கேட்டு ஏமாந்த ஆரம்ப நாட்களிலேயே தனது வீட்டுக்கு முன்னால் உள்ள தோட்டத்தில் நிற்கும் கொய்யா மரத்தடியில் ஒரு சிறு குடிசை போடத் தொடங்கினான். மூலைக் கொன்றாக நான்கு மரங்களை ஊன்றி நாணல் வசிச்சுகளைப்

பிடித்து வரிச்சு மறைய மண்ணைக் குழைத்து ஒரு பக்கம் அறைந்தும் ஆயிற்று. வேலிக்கு வெளியே லயத்தை ஒட்டி நிற்கும் ஈரப் பலாமர நிழலில் நின்றபடி முளைத்தெழும் குடிசையையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்த பெரிய கங்காணி தலையை ஆட்டிக்கொண்டார்.

'என்னடாலே அது குடிசை... வீடு கட்றீகளோ...? இன்னைக்கு நீ கட்டிக்காட்டு, நாளைக்கு ஒருத்தன் நாளான் னைக்கு ஒருத்தன்னு அத்தனைபேரும் குடுசை போட தொவங் கிறுவானுக. ஒனக்குத்தான் வீட்டுக்கு முன்னுக்கு தோட்டம் இருக்கு. தோட்டத்திலே போட்டுக்கிறே. தோட்டம் இல்லாதவன் என்னா செய்வான். ராவோடராவா பத்து தேயிலையை புடுங்கிப்புட்டு அதிலை போட்டுக்குவான். வெளங்குதா.... அதனாலே இந்தக் குடிசை விவகாரமே வேண்டாம். ஆபீசு கீபீசுன்னு... தொரையருதி போறதுக்குங் காட்டியும் மருவாதியாய் சொல்கிறேன். இப்பவே போய் உடைச்சு போட்டுரு. இல்லை...'

தன் அழைப்புக்கிணங்க வந்து தனக்கு முன்னால் குன்றிப் போய் நிற்பவனை ஏசிப் பயம்காட்டி அனுப்பியதுடன், அடுத்த நாள் அந்தப் பக்கமாக நடந்து குடிசை உடைந்திருக்கிறதா இல்லையா என்பதையும் செக் பண்ணிக்கொண்டார். கொய்யா மரத்தடியில் குடிசைக்குப் பதில் குட்டிச் சுவர் மட்டுமே நின்றது.

இத்தனை மன உளைச்சல்களிலேயும் எந்த எளவைக் கொடுத்தாவது என்ற எண்ணத்துடன் எப்படியோ தூங்கிப் போனான்.

ஆம்... தூக்கம் என்பது மனிதனுக்கு ஒரு வரப்பிரசாதம் தான்!

தேயிலைக் குச்சியால் பல்லைத் தேய்த்துத் துப்பிவிட்டு ஜில்லென்று ஓடும் ஆற்று நீரில் முகத்தைக் கழுவிக்கொண்டு பெரட்டுக்களத்தை அடைந்தான்.

மற்ற நாட்களில் என்றால் கை வாளியில் சுடுதண்ணீர் காத்துக்கொண்டிருக்க வேண்டும்.

ஆனால், இன்று?

விரித்துப்படுத்திருந்த துப்பட்டியைத் தோளில் போட்டுக் கொண்டு, தன் வீட்டுப் பெண்கள் துண்டு வாங்க வரும்போது எங்கே தன்னைப் பார்த்துவிடுவார்களோ என்ற பயத்தில் சற்று மறைவாக நின்றுகொண்டிருந்தான்.

'எப்ப காம்பிரா விட்டுப்போறே...?'

'வீடெல்லாம் சரி... இன்னொரு நாலு நாள்லே...' பின் வரிசையில் பேச்சுக் குரலால் திரும்பிப் பார்த்தவனுக்கு விஷயம் பிடிபட்டுக்கொண்டது.

தோட்டத்திற்கே பழைய ஆளான பண்டா லயத்தைக் காலி செய்துவிட்டு நாட்டில் சொந்தமாகக் கட்டியுள்ள வீட்டிற்கு குடிபெயருகிறான்.

இவனுக்கு செய்தி இனித்தது.

'காலியாகும் இந்தக் காம்பிராவை எப்படியாவது அமுக்கிக் கிறணும்.... எந்த இளவைக் கொடுத்தாவது...' என்ற எண்ணத் துடன் அன்றே பெரியவரைக் கண்டு தனக்குள்ள கஷ்டங்களைக் கூறி ஒரு பாட்டம் அழுதுவிட்டு ஐயாவுக்கு சந்தோசம் செய்வது பற்றியும் இலேசாக இழையோட்டிவிட்டு 'சரி பயப்படாதே...' என்ற பெரியவரின் உத்தரவாதத்துடன் வெளியேறியவன், ஒரு வெள்ளையை வாங்கிக்கொண்டு வந்து தயாராய் வைத்துக் கொண்டான். வீடு காலியானதும் சென்று ஐயாவைக் கண்டு கொள்ள.

காலியாகப் போகும் காம்பிராவுக்கு முழுமூச்சாக இவனும் அடிபோடுகிறான் என்பது 'எப்ப காம்பிரா விட்டுப்போறே' என்று பண்டாவைக் கேட்டுக்கொண்டேயிருந்த இன்னொரு வனுக்கு சுருக்கென்றது. முந்திக்கொண்டான்.

ஒரு வெள்ளையை வாங்கி வீட்டில் வைத்துக்கொண்டு இவன் இருக்க, இரண்டை வாங்கிக்கொண்டு போய்க் கொடுத்து ஐயாவைப் பார்த்தும் விட்டான் அவன்.

எவ்வளவு சிறிய மீனாக இருந்தாலும் தன்னிலும் சிறியதை விழுங்கத்தானே செய்கிறது!

இரண்டு வெள்ளையைக் கண்டதும் ஐயா அசந்தே விட்டார். 'காம்பிரா உனக்குத்தான்டா' என்று கையடித்துக் கொடுத்தவர் 'அவனுக்கும் தரேன்னோமே' என்று ஒரு விநாடி குழம்பி உடனே சுதாகரித்துக்கொண்டு 'பண்டா லயம் விட்டுப் போற அண்ணிக்கு கட்டாயம் வா' என்று கூறி அவனை அனுப்பிவைத்தார்.

பண்டா குடிபெயரும் தினம்! சந்தோசத்தை ஒரு பேப்பரில் சுற்றி கமக்கட்டில் இடுக்கிக்கொண்டு ஐயா வீட்டுள் நுழைந்தவன் அங்கு வேறுமொருவன் இருப்பதைக் கண்டு சற்றுத் தயங்கினான்.

யாரு...? அட நீயா...? வுள்ள வா. என்னா கையிலே பார்சல்....?

'ஒண்ணுமில்லைங்க' என்று மழுப்பியவனை விடாமல் இழுத்துப் பிடித்தார் கங்காணி.

பண்டா காலியாக்கிறான்லே காம்பிரா அதை இவனுக்குத் தான் குடுக்கப் போறேன்... என்று மற்றவரிடம் கூறியவர், இவன் பக்கம் திரும்பி 'என்னப்பா என்னமோ வைச்சிருக்காப்போலே இருக்கு. கேட்டா ஒண்ணுமில்லேங்கிற. கொண்டாயேன் பார்ப்போம்....' என்று அதை இழுத்துப் பிரிக்கிறார்.

வெள்ளைப் போத்தல் வெளியே வருகிறது!

ஐயாவின் முகம் ஏன் இப்படிக் கோரமாக மாறவேண்டும். குழம்பிப்போய் நிற்பவனைக் கோபமாகப் பார்த்து ஐயா கத்துகிறார்.

'லயம் வாங்குறத்துக்கு லஞ்சம் கொண்டாந்தியோ... இந்தாப்பா நீ சாக்கி....' என்று போத்தலை உயரத் தூக்கி மற்ற வனிடம் காட்டிவிட்டு 'இந்தாடா, நீயே கொண்டு போ. ஒனக்கு லயம் கெடயாது, ஒண்ணும் கெடயாது. ஓடிப்போ... படவா... அதோட நாளைக்கு காலையிலே ஆபீசுக்கு வந்துடு. நீயும் தாம்பா... நல்ல வேளை நீ இருந்தே.' பெரிய கங்காணி மூச்சு விடாது கத்தினார்.

வெலவெலத்துப் போனவன் நடுங்கும் கால்களுடன் வெளியே நடந்தான்.

★

# இருப்பியல்

பிதா சுதன் போட்டவாறு கோவிலுக்குள் நான் நுழைந்த போது முன் வரிசை இருக்கையில் அங்கொருவர் இங்கொரு வராகக் கொஞ்சம் பேர் ஜெபமாலையும் கையுமாகப் பிரார்த்த னையில் ஈடுபட்டிருந்தனர். சுற்றிலும் நிற்கின்ற சுரூபங்களின் காலடிகளில் கண்ணீரும் கம்பலையுமாகச் சிலர்!

கட்டாகக் கொளுத்தப்பட்ட மெழுகுத்திரிகளின் நெருப்பு வெளிச்சத்தில் கண் மூக்கு எரிய எரிய, கன்னங்கள் மின்ன மின்ன, வழிந்தொழுகும் வியர்வையுடன் விழியுயர்த்திக் குத்திட்டு நிற்கும் சிலர்!

சிலுவையில் அறையப்பட்டதுபோல் விரிந்த கைகளுடன் பீடத்தை நோக்கி முழங்கால்களால் நகர்ந்தபடி சிலர்!

மாதாவின் காலடியில் ஒரு கொழுத்த அம்மாள். சேலைக்குள் நெளியும் தடித்த கால்களை சீராக வைத்துக் கொள்ள முடியாமல், கிட்டத்தட்ட விழுந்து கிடப்பதைப் போல்....

எனக்குப் பாவமாக இருக்கிறது! பயமாகவும் இருக்கிறது. பக்தியின் வேகத்துடன் மாதாவின் முன் முழங்கால் மண்டியிடப்

போய் உடல் ஒத்துழைக்காமையால் கால் பிசகி சரிந்து விழுந்து அப்படியே அமர்ந்து, எழவே முடியாமல் கிடப்பதுபோலவும் தெரிகிறது. மாதாவின் முன்னுள்ள இருக்கையில் அமர்ந்து கொள்கிறேன். அந்த அம்மாளின் மேல் ஒரு கண் வைத்தபடி ஏதாவது அவசரம் என்றால் உதவும் எண்ணத்துடன். அம்மாவின் கைகளில் கிண்டி குழந்தை ஏசுவின் நவநாள் செபக் கொத்து.

முன் இருக்கைக்காரர்களின் கைகளில் விரலடையாளத்துள் விரிந்திருக்கும் பைபிள். மத்தேயுவின் வரிகள். *8:24:25*

'உறங்கிக்கொண்டிருந்த இயேசுவை அணுகிய சீடர்கள் அவரை எழுப்பியபடி கதறினார்கள். ஆண்டவரே காப்பாற்றும் நாங்கள் மடிந்துகொண்டிருக்கின்றோம்....'

அந்தச் சீடர்களைப் போலத்தான் இவர்களும், எங்களைக் காப்பாற்றுங்கள், எங்களைக் காப்பாற்றுங்கள் என்று பிரார்த் திக்கக் குழுமி உள்ளனர். பிரச்சனைகள் கூடக் கூடப் பிரார்த் தனைகளும் கூடத்தான் செய்கின்றன.

மடிந்து அலங்கோலமாய் விரிந்து கிடந்த கொழுத்த கால்களில் ஒன்றை, வலிப்பு வந்துவிட்டது மாதிரி விசுக் விசுக் கென்று உதறி, பிறகு 'டக்'கென ஊன்றி எழுந்து மாதாவின் கன்னத்தில் கொஞ்சி முத்தமிட்டபடி என்னைக் கடந்து நடக் கின்றார் அந்தம்மாள்.

என்னால் நம்ப முடியவில்லை.

கோவிலில் கூடி இருக்கும் இந்தக் கொஞ்சம் பேரும் விசுவாசத்தின் உச்சத்தில் இருக்கின்றனர். ஆழமான விசுவாசத் தின் மூலம் ஏசுவுடன் உரையாடிக் கொண்டிருக்கின்றனர். யாராவது ஒருவர் எழுந்து நின்று அருகே அலையடித்துக் கிடக்கும் கடலைப் பார்த்து 'தூரப்போ' என்றால் அது போய்விடும்.

அத்தனை விசுவாசம்.

அந்தக் குண்டான அம்மாள் விசுக்கென்று எழுந்து விறுவிறென்று நடந்துவிடவில்லை!

ஒருவேளை எழும்ப முடியாமல் தவித்தால் உதவி செய்வோம் என்றுதான் அமர்ந்தேன். அந்தம்மாள் எழுந்து நடந்துவிட்ட பிறகுதான் என்னுடைய வெறுமை புரிந்தது.

பின்னழகு, முன்னழகு காட்டவும், களிக்கவும், பார்த்துப் பரவசிக்கவும் என்று எதுவும் அற்ற ஒரு இடைநிலைப்பொழுது.

கூட்டம், கும்மாளம், குழுமம், குதூகலம், ஆரவாரம், அலங்காரம் என்று அவற்றிற்கான வேளைகள் உண்டு. பொழுதுகள் உண்டு. இப்போது எதுவுமில்லை.

இந்த நேரத்தில் நான் வந்தது, இந்தக் கூடியிருக்கும் கொஞ்சப் பேரைப் போல ஏசுவுடன் பேச அல்ல. ஏசுதாச னுடன் பேச. ஏசுதாசன்தான் இந்தத் தேவாலயத்தை ஆண்டு கொண்டிருப்பவர். அதாவது பங்குத் தந்தை. எனது உற்ற நண்பர்.

போலீஸ்காரர்களுடன்தான் நட்புகூடாது என்பார்கள் பெரியவர்கள். பகையும் கூடாதுதான். இரண்டிலுமே தனித் தனியான ஆபத்துகள் உண்டு.

'பாதர்'மார்களிடம் நட்புகொள்ளலாம். பகையும் கொள்ளலாம். ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் காட்டுவார்கள் என்று கூற முடியாவிட்டாலும், நம் கன்னத்தில் அறையக் கை ஓங்க மாட்டார்கள் 'என்பதற்கு என்ன உத்தர வாதம்' என்கின்ற மனதை அடக்கி உள்ளேயே அமுத்திக் கொண்டு எழுந்து பின்பக்கம் நோக்கி நடந்தேன், பங்குக் குருவானவரைக் காண.

இவருடனான எனது நட்பு பாடசாலை நாட்களில் இருந்து தொடர்ந்த நட்பு.

அப்போது ஏசுதாசன் அல்ல. என்னுடைய பெயர்தான் அவருக்கும்.

வகுப்பாசிரியர் பிரண்ட் மார்க் செய்யும்போது எனக்காக அவனும் அவனுக்காக நானும் பிரசண்ட் சொல்லி ஏச்சுப் பட்டிருக்கின்றோம். தோட்டத்துச் செக்ரோலில் சின்னக் கருப்பையா பெரிய கருப்பையா என்பது மாதிரி அதன் பிறகு ஆசிரியரும் இரண்டு அடைமொழிகளை எங்கள் பெயர்களுக்கு முன்னால் இணைத்தே கூப்பிடுவார். நல்லவன், கெட்டவன் என்பதே அடைமொழி. நல்லவன் எனக்கு. கெட்டவன் அவனுக்கு. ஏசுவைப் போலவே இவனும் ஒரு நாள் காணாமல் போய் ஆண்டுகள் பல கடந்து திடீரென ஒரு நாளில் கோவிலுக்குச் சென்றிருந்த என் முன்னால் அங்கியும் தாடியுமாக நின்றான். தவறு! தவறு! பெருந் தவறு! நின்றார்.

முழந்தாளிட்டு ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டேன். கண்ணதாசன், பாரதிதாசன் என்பது போல் ஏசுதாசன் என்பதும் அவருக்கான பெயராகிவிட்டது. எங்கள் பங்கில் பணியாற்றிய

போது இரண்டு மூன்று தடவைகள் வீட்டுக்கும் வந்திருக்கிறார். மனைவி மக்களுடனும் மகிழ்ந்து பேசி உணவருந்திச் சென்றுள்ளார். பிறகு மாற்றலாகிப் போய்விட்டார். இப்போது இந்தக் கோவிலுக்கு வந்திருக்கிறார் பங்குத் தந்தையாக. இந்த நினைவுகளுடன் அவரிடம் ஒரு உதவி கோரி இங்கு வந்து காத்திருக்கின்றேன்.

தெரிந்தவர்கள், நண்பர்கள், அரசியல்வாதிகள், செல்வாக் காளர்கள் என்று எவரிடமும் உதவி கேட்டுப் பழக்கப்படாதவன் நான். உதவிக்காகப் போகாதவன் நான். ஆனாலும், சூழ்நிலை என்னை அருட்தந்தை ஏசுதாசனிடம் ஒரு உதவிக்காக கொண்டுவந்து அமர்த்தியிருக்கிறது.

கோபால் என்கின்ற கோபாலகிருஷ்ணன் என்னுடைய நெருங்கிய நண்பர். பாதரைப் போல் பள்ளித் தோழன் அல்ல. தொழில் தோழன். ஏறத்தாழ ஒரு முப்பதாண்டு காலம் ஒன்றாகத் தொழில் புரிகின்றோம். ஒரு தனியார் நிறுவனத்தில் ஒன்றாகப் பதவி ஏற்று, ஒன்றாக ஊழியமாற்றி, ஒன்றாகப் பழகி, ஒன்றாகப் பதவி உயர்வுகள் பெற்று அவர் ஒரு பகுதிக்கும் நான் ஒரு பகுதிக்குமாக ஒன்றாகப் பொறுப்பாளராகி....

இந்த ஒன்றாக, ஒன்றாக என்னும் நிலை உத்தியோகம், தனித்தனி வாழ்வு, குடும்பம், பிரபஞ்சம் என்று ஒவ்வொரு சின்னச் சின்ன, பெரிய பெரிய விஷயங்களில் எல்லாம் எங்களை இணைத்தே வைத்துள்ளது. நட்பைப் பிணைத்தே வந்துள்ளது. அவருக்குத் தெரியாமல் என்னிடமோ எனக்குத் தெரியாமல் அவரிடமோ ரகசியங்கள் ஏதும் இருந்ததில்லை.

இது எனது அகத்தைப் பொறுத்தே என்பதை கோபாலின் மனைவியின் வருகை ஒருநாள் எனக்கு நிரூபித்தது.

'மனைவி வந்திருப்பதாக' வாயிற்காப்போன் வந்து கோபாலிடம் கூற 'இப்போது பார்க்க முடியாது என்று சொல்' என்று அவர் கூச்சலிட 'என்னைப் பார்க்கலாமா' என்று அந்தம்மாள் அனுமதிகோர 'கூட்டிவா' என்றேன். ஒரு உயர் அதிகாரியான கோபால், தன்னைக் காண வந்த மனைவியை இப்படித் திருப்பி அனுப்ப வாயிற்காப்போனிடம் கூச்சலிட்ட செய்கை எனக்கு மிகவும் அசிங்கமாகப்பட்டது.

வரவேற்பறையில் காத்திருந்தேன்.

மழை பொழியக் காத்திருக்கும் கருமேகக் கூட்டம் போல் அழுகைக்காகத் துடித்துத் தவிக்கும் கண்களுடன் வெறுமையும் விரக்தியுமாக...

எத்தனை அழகான முகம் அவளுடையது! ஒரு தெய்வீக தேஜசுடன்....

ஒளி தெறிக்கும் அந்த ஒற்றைக்கல் மூக்குத்தி, கை நிறைந்து குலுங்கும் தங்க வளையல்கள்... கழுத்தடியின் சட்டைக்குள் மின்னி மின்னிப் பதுங்கிக்கொள்ளும் அந்த பதின்மூன்று சவரன் தாலிக்கொடி.

'என்ன இப்படி?...' என்றேன்.

'ஒரு வருடத்துக்கு மேலாக சம்பளமே தருவதில்லை. பிள்ளைகள் இரண்டும் யாழ்ப்பாணத்தில் படிக்கிறதுகள்...'

'செலவுக்கான காசை அம்மாவுக்கு நான் மாதமொரு தடவை சென்று கொடுத்தே ஆகவேண்டும். நகைகள்தான் கை கொடுக்கின்றன.... அத்தனையும் பேங்கில்.'

'ஏன் அவர் மிகவும் நல்லவராயிற்றே...' நான் மிகவும் குழப் பத்திற்குள்ளானேன்.

'அப்படியே இருங்கள். நான் அவரைக் கூட்டி வருகின் றேன்' என்று கிளம்பினேன்.

'வேண்டாம் வேண்டாம்' என்று தடுத்தவர், 'நான் உங்க ளைப் பார்த்துப் பேசியதுகூட அவருக்குத் தெரிய வேண்டாம்.... இரவில் வீட்டை ரணகளமாக்கிவிடுவார்' என்றார்.

நான் மௌனியானேன்.

அந்தம்மாவே பேசினார்கள்.

'யாரோ ஒரு பெண்ணுடன் தொடர்பாம். சம்பளம் அது இது எல்லாம் அங்கேயே போய்விடுகிறது. நானோ யாழ்ப் பாணம், கொழும்பு என்று காடாறு மாதம் நாடாறு மாதம் வாசம் செய்கிறவள்... என் பிழைதான்' என்று அழத்தொடங்கி விட்டார். எனக்கு அசௌகரியமாக இருந்தது. நல்ல வேளையாக அங்கு வேறு யாரும் இல்லை. சிங்களத்தில் ஒரு பழமொழி இருக்கிறது. 'பிலாக்காய் என்றால் பிளந்து பார்த்துவிடலாம். மனிதனை எப்படிப் பார்ப்பது என்று.'

'எங்குள்ள பெண்ணாம். எப்படித் தொடர்பு ஏற்பட்ட தாம்.... என்று ஏதாவது தெரியுமா?' என்று நம்பவும் முடியாமல் நம்பாமல் இருக்கவும் முடியாமல் வினவினேன்.

'அப்படி என்றால் உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா...' என்று ஆச்சரியத்துடன் என்னை ஏறிட்ட அவர், 'இங்கே வேலை செய்கிற பெண்தான்.... இதோ இந்தக் கடிதத்தைப் பாருங்கள்' என்றார்.

ஏறத்தாழ ஒரு வருடத்துக்கு முன் யாழ்ப்பாணத்து விலாசத் துக்கு எழுதப்பட்ட கடிதம் அது. கடிதம் குறிக்கும் அந்தப் பெண் ஒரு சிங்களப் பெண். கிறிஸ்தவப் பெண். நண்பர் பொறுப்பாளராக இருக்கும் பகுதியின் சிற்றூழியர். கடிதம் குறிக்கும் சில பகுதிச் சம்பவங்கள் ஏற்கனவே என் காதுகளுக்கும் எட்டியவைதான். நான்தான் நம்பத் தயாரில்லை.

'ஆரம்பத்தில் நான் இந்தக் கடிதத்தையும் அதன் கதை களையும் நம்பவில்லை. யாரோ பொறாமையில் எழுதியதாகவே எண்ணினேன். ஆனால், பிறகுதான் சந்தேகம் வரத் தொடங் கியது. கடிதங்களுக்குப் பதில் போடுவது இல்லை. காசு அனுப்பு வதில்லை. நீண்ட வார இறுதிகளில் கூட யாழ்ப்பாணம் வருவதில்லை. அதன் பின் கூடுதலாகக் கொழும்பில் தங்கத் தொடங்கினேன்.'

'வெகு நேரம் கழித்து வீடு வரும்போது கேள்வி எழுப்பி னேன். அந்தப் பெண்ணைப் பற்றிக் கேட்கத் தொடங்கினேன். எனது குழந்தைகளினதும் செலவுக்காகப் பணம் கேட்டேன். ஏச்சுக் கிடைத்தது. சண்டை மூண்டது. அடி, உதைகள் கிடைத்தன. இப்போதும் கூட பணம் கேட்டுத்தான் வந்தேன்! நாளைக்குப் பணத்துடன் பிள்ளைகளைப் பார்க்க வருவதாக அம்மாவுக்கு எழுதிவிட்டேன். கட்டாயமாகப் போயே ஆகவேண்டும்...'

'எவ்வளவு பணம்' என்று கேட்டேன்.

அவசரமாகக் கைகளை அசைத்தபடி 'இல்லை இல்லை' என்றவர் 'அவர் தர வேண்டும்...! நான் உங்களைப் பார்த்துப் பேசியது ஒன்றும் அவருக்குத் தெரியவேண்டாம்.... உங்கள் ஆப்த நண்பராயிற்றே. மீட்கப் பாருங்கள்....' என்று கூறிவிட்டு கண்களைத் துடைத்தபடி போய்விட்டார்.

நண்பரின் மனைவி 'ஆரம்பத்தில் தான் அதை நம்பவில்லை' என்றதற்கும் நான் அவற்றை நம்பாததற்குமான காரணங்கள் வேறுபட்டவை. தன் கணவன் மீது ஒரு தமிழ்ப் பெண் வைத்திருக்கும் அதீத நம்பிக்கை நண்பரின் மனைவியினுடையது. என்னுடையதோ பெண்கள் மத்தியில் வேலை பார்க்கும் ஆண்கள் மீது! அல்லது ஆண்கள் மத்தியில் வேலை பார்க்கும்

பெண்கள் மீது! இது போன்ற அபாண்டங்கள் சுமத்தப்படுவது இயற்கை...

சம்பந்தப்படுத்தப்படும் அந்தப் பெண்ணின் தோற்றம் பற்றிய நினைவு... என்னுடைய நண்பர் நல்லவர் என்ற நம்பிக்கை எனப் பல படிகள் கொண்டது. ஒரு ஆணைக் கவரும் எந்தவிதமான பெண்ணின் கவர்ச்சியும் இல்லாத பெண் அவள். மெலிந்த உடல், சப்பட்டையான தோற்றம். குச்சி குச்சி யான கை கால்கள்... கோபாலகிருஷ்ணனோ ஆணழகனேதான்! அந்தம்மாவும் கோபாலும் சேர்ந்து நிற்கையில் எப்படி இருக்கும்! ஆகவே தான் இந்தக் கதை வெறும் புரளி அல்லது கிண்டல் என்று அப்போது நம்பவில்லை. ஆனால், இப்போது...!

தமிழில் ஒரு பழமொழி இருக்கிறது.

'கிளிபோல் பெண்டாட்டி இருந்தாலும், குரங்குபோல் ஒரு வைப்பாட்டியும் வேண்டும் நமது ஆண்களுக்கு' என்று.

நண்பர் கோபாலிடம் பேசினேன். கத்தினேன். உபதேசித் தேன். சண்டை பிடித்தேன். ஒன்றும் நடக்கவில்லை. தலை குனிந்து மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார்.

மனைவியின் பணத்துக்கான தேவை பற்றி குழந்தைகளின் கல்விச் செலவுகள் பற்றிக் கூறினேன்.

விருட்டென எழுந்து போய்விட்டார். இரண்டு நாள் கழித்து மனைவியின் பெயரில் யாழ்ப்பாணத்துக்கு மூவாயிரம் ரூபாய் மணி ஓடர் அனுப்பிய ரசீதைக் கொண்டு வந்து காட்டினார்.

'மாதா மாதம் இப்படி. இதைவிடக் கூடவே பணம் போய்ச் சேரும்' என்றார்.

அவள் அங்கேயே இருக்கட்டும். இங்கே வந்து தொந்தரவு செய்யாமல் என்னும் தொனி தெறித்தது.

அந்தப் பெண் இப்போதெல்லாம் வேலைக்கு வருவதில்லை.

நண்பரின் விலாசம் அந்தப் பெண்ணின் விலாசமாக மாறி யிருந்தது. அவர் அவளுடன் குடும்பம் நடத்துவது ஒரு திறந்த ரகசியமாகிவிட்டது.

சட்டபடி பதிவுத் திருமணமும், சொந்த பந்தங்களுக்காக ஊரைக் கூட்டி செபஸ்தியார் தேவாலயத்தில் கோயில் கல்யாணமும் நடந்தேறியது. நண்பரின் தமிழ் மனைவி பற்றிய செய்திகள் சூழ்நிலையும் சுகமானதாக இல்லை.

இருக்கிறார்களோ அல்லது அவுஸ்திரேலியா, கனடா என்று போய்விட்டார்களோ தெரியவில்லை.

இந்தப் பெண்ணோ, தான் தாயாகப் போகும் அடையாளங்கள் ஊருக்குத் தெரியவரும்முன், இவர்தான் என் கணவர் என்னும் அடையாளத்தை சட்டப்படியும், சமயப்படியும் ஊராருக்கு தெரிவித்துக்கொண்டாள். தன்னைவிட்டு இந்த மனிதன் ஓடிவிடாதிருக்க சாதுர்யமான அரண்களுடனான வியூகமமைத்துக்கொண்டாள்.

மொழி, மதம், இனம், சுற்றம், சூழல், சமூகம், எனப் பல படிகள் கொண்ட வியூகம் அது. வெளித்தோற்றம் காட்டாத உள் மன விலங்குகள்.

சேறு கண்ட இடத்தில் மிதித்து தண்ணீர் கண்ட இடத்தில் கழுவிக்கொள்ளும் ஆணாதிக்கக் கூறுகளை மிக லாவகமாகக் கடிவாளம் இட்டு ஜாக்கிரதையாகப் பற்றிப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

யாழ்ப்பாணத்து உயர்குல இந்துவான கோபால கிருஷ்ணன் கால்வாசிக் கிறிஸ்தவனாகவும் அரைவாசி சிங்களவராகவும் மாறிக்கொண்டிருந்தார். தனிமை அவரை மரணிக்கத் தொடங்கி இருந்தது. காலம் மிக வேகமாகவும் மிகக் குரூரமாகவும் ஓடிக் கொண்டிருந்தது. எண்பத்து மூன்று வந்தது. இலங்கை வெந்து தணிந்தது.

கோபாலைப் போலவே அழகான, ஆகிருதியான ஒரு பெண் குழந்தை இருப்பதை பிறகு அறிந்துகொண்டேன். தகப்பனும் பிள்ளையுமாக வேலைத்தளத்துக்கு வந்திருந்தனர்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவரது தோள்வரை உயர்ந்திருந்தாள் அந்த அழகான மகள். அட்வான்ஸ் லெவல் படிப்பதாகவும், செபஸ்தியார் ஆலயத் திருவிழாவுக்கு நன்கொடை சேகரிக்கக் கிளம்பியுள்ளதாகவும் கூறி டிக்கெட் புத்தகத்தை நீட்டினாள். தேவாலயத்தின் பாடற் குழுத் தலைவியாக இருப்பதாகவும் ஞாயிறு மறை வகுப்பின் ஆசிரியை என்றும் கூறினாள். குடும்பமே கோவிலுடன் நெருக்கமானதாக இருப்பதையிட்டு சந்தோஷப்பட்டேன். ஒற்றைக்கல் மூக்குத்தியுடன் அந்தம்மாவின் முகம் ஓடிவந்து, ஓடிவந்து மனதிலாடியது.

இப்போது எப்படி இருப்பார்கள்! எங்கே இருப்பார்கள்! ஆணும் பெண்ணுமான அந்தப் பிள்ளைகள் என்ன செய்து

கொண்டிருப்பார்கள்? காலம் எப்படி எல்லாம் மனித மனங்களின் காயங்களை குணப்படுத்திவிடுகிறது.

குணப்படுத்திவிடுகிறதா அல்லது மறைத்து வைத்துக் கொண்டு மறக்கடித்துவிடுகிறதா...? ஒருநாள் கோபால கிருஷ்ணன் மிகவும் கலவரப்பட்டுப்போய் இருந்தார். எனக்குப் புதினமாக இருந்தது. பூகம்பங்களையே புன்முறுவலுடன் எதிர்கொள்பவராயிற்றே அவர்.

யாரோ பாடசாலை நண்பனுடன் தனியாகப் படம் பார்க்கப் போயிருக்கின்றாள் அவருடைய மகள்.

தாய்க்காரிக்குத் தெரியவந்து ஒரே சண்டையும் கூச்சலும்.... அம்மாவும் பிள்ளையும் அடித்துக்கொள்ளாத குறையாம்.

நான் கேட்கவில்லை. அவரே கூறினார். ஆறுதல் கூறினேன். பிறகொரு நாள் அந்தப் பெண்ணே என்னைத் தேடி அலுவலகத்துக்கு வந்தாள். ஒன்றுமே நடைபெறாதது போல் மிகவும் சுமுகமாகப் பேசினாள்.

மகளுக்குத் திருமணம் நிச்சயமாகி இருக்கிறது என்றாள். மாப்பிள்ளை வீட்டாரின் மகிமைகள் பற்றி ஒரு பாட்டம் பாடினாள். தங்கள் கோவில் குருவானவர் மூலமாகவே இத் திருமணத் தொடர்புகள் ஏற்பட்டதாகக் கூறினாள். மாப்பிள்ளையின் நெருங்கிய உறவினர் ஒருவர் குருவானவர்தான் என்றாள்.

‘கோவில்களுடன் நெருக்கமான தொடர்புகள் கொண்ட குடும்பங்கள் இணைகின்றன. மிக்க மகிழ்ச்சி.... தாமதம் செய்யாமல் முடித்துவிடுங்கள்’ என்றேன்.

‘ஒரு சின்ன சிக்கல் எழுந்துள்ளது.’

‘என்ன’ என்றேன்.

‘எங்கள் குருவானவர் பார்த்துக்கொடுத்த மாப்பிள்ளை... மாப்பிள்ளையின் உறவினர் ஒருவரும் குருவானவர்... ஆனால்...’ சற்றே தடுமாறினாள்.

‘என்ன ஆனால்....’

‘பெண்ணின் தந்தை இந்துவாயிற்றே!’

‘அதற்கென்ன செய்யலாம்....’

‘செய்தாக வேண்டும்... இந்தச் சம்பந்தம் விட்டுப் போகாமல் இருக்க... செய்தாக வேண்டும்.’

நான் பேசாமலிருந்தேன். அவளே தொடர்ந்தாள்.

'அவரைக் கிறிஸ்தவராக்க வேண்டும்....'

'எப்படி...?'

'நீங்களே இப்படிக் கேட்டால் எப்படி... அவருக்கு பெப்டிஸம் கொடுக்க வேண்டும்.... எங்களுடன் அடிக்கடி பூஜைக்கெல்லாம் வருவார். ஜெபங்கள் எல்லாம் மனப்பாடமாய் சொல்வார். உங்களுக்குத் தெரிந்த பாதர்மார்கள் நிறையப் பேர் இருப்பார்கள்தானே... யாராவது ஒருவரைப் பிடித்து... எங்கள் பங்குப் பாதர், பெண்ணின் பெற்றோரின் பெப்டிசம் சர்டிபிகேட்டைத் தான் கேட்கின்றனர்... என் மகளின் திருமணம் உங்கள் ஆருயிர் நண்பனின் மகளின் திருமணம் உங்கள் கைகளில்தான் இருக்கிறது.

கண்களால், மனதால் கெஞ்சிவிட்டு அவள் போய் விட்டாள்.

அவள் சென்ற பின் கோபால் வந்தார்.

முடிந்தால் உதவும்படிக் கேட்டுக்கொண்டார். தனக்கு ஆட்சேபணை இல்லை என்றார். அவருக்கு ஆட்சேபணை இருக்க முடியாது என்பது எனக்கும் தெரியும்.

அவர் சூழ்நிலைகளின் கைதியாகி வெகுகாலமாகிவிட்டது.

நண்பர் கோபாலின் ஞானஸ்நானம் பற்றி தந்தை ஏசுதாசனிடம் பேசினேன்.

'முடியாது' என்று மூர்க்கமாக மறுதலித்தார். ஒரு இந்துவை கிறிஸ்தவனாக மதம் மாற்றுவதில் தனக்குச் சம்மதம் இல்லை என்றார். இந்து மதத்தின் பழைமை பற்றியும் அதன் ஆழங்கள் பற்றியும் எனக்கு உபதேசிக்கத் தொடங்கிவிட்டார்.

கேட்டுக்கொண்டிருப்பதைத் தவிர என்னால் என்ன செய்ய முடியும்!

'ஏசு இளமைப் பருவத்தில் இந்தியாவில் ரிஷிகளுடன் வாழ்ந்து இந்து தத்துவங்களை நன்கு கற்றறிந்திருக்க வேண்டும். அவருடைய போதனைகளில் இந்தியத் தத்துவங்கள் நிறைந்து இருக்கின்றன' என்று ஒரு ஆராய்ச்சி நூலில் எப்போதோ வாசித்தது என் நினைவிலோடுகிறது.

'பாதர், கேள்விகளே இல்லாமல் நாங்கள் கேட்டுக் கொண்டிருப்பது உங்களது பிரசங்கங்களைத்தான். இப்போது

வேண்டாமே... உங்களுடைய ஆன்மீகத் தத்துவார்த்தங்களை நான் எதிர்க்கவில்லை. விமர்சனம் செய்யவும் முயலவில்லை. யதார்த்தத்தையும் கொஞ்சம் புரிந்துகொள்வோமே பாதர்... இது ஒரு பெண்ணின் வாழ்க்கைப் பிரச்சனை....! இந்து மதமா, கிறிஸ்தவ மதமா என்பதல்ல முக்கியம்.... மனிதம்...!

'சரி சரி... திருமுழுக்குச் செய்வோம். அவருடைய கிறிஸ்தவ மத அறிவு எப்படி.... ஜெபங்கள்?'

'நீங்களே கேள்வி கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். அவர் இப்போதே அரைவாசிக்கு மேல் கிறிஸ்துவர்தான்.... முழுதாக்க வேண்டியது உங்களுடைய திருமுழுக்கு' என்றேன்.

'என்னிடம் பேச அவரை அழைத்து வாருங்கள்' என்றார். 'எப்போது' என்றேன்.

'அவசரம் என்றால் நாளை இதே நேரம்... கூட்டி வாருங்கள்... நான் பேசிய பிறகு நாளைக் குறிப்பிடுவேன்'... என்றார். சிரித்தபடி விடைபெற்றேன்.

★

## மனிதர்கள் நல்லவர்கள்

நாளைக்குத் தீபாவளி

பண்டிகை நெரிசலில் பஸ் திணறியது.

கை நிறைந்த பைகளும், பை நிறைந்த சாமான்களுமாய், ஆட்கள் முட்டி மோதிக்கொண்டிருந்தனர்.

உத்தியோகம் என்று பிரித்துவிட்ட பிறகு, பெற்றவர் பிள்ளைகளுடன் கணவன் மனைவி மக்களுடனும் உற்றார் உறவினருடனும் ஒன்றாகிக் களிக்க ஏதாவது ஒரு பண்டிகை வரவேண்டியிருக்கிறது.

"இந்த பஸ்சை விட்டாச்சுன்னா அடுத்தது அஞ்சுக்குத் தான்" என்றபடி தனது முழுப்பலத்தையும் காட்டி ஒருவர் முண்டி முன்னேறுகிறார்.

பஸ்ஸில் ரயிலில் தியேட்டரில் ஒரு நல்ல இடம் பிடித்துக் கொள்வதற்கு முட்டி மோதும் அளவுக்கு வாழ்க்கையில் ஒரு நல்ல இடம் பிடிப்பதற்கு நம் மக்கள் முட்டுவதில்லை, மோதுவதில்லை.

அது தானே வந்து தானே போய் விடுகிறது! பதுளையில் இருந்து சுற்றி உள்ள தேயிலைத் தோட்டங்களுக்கு நடக்கும் பஸ் சேவை மாநகரசபை விளக்குகள் போன்றவை. இருந்தாற் போல் எரியும் இருந்தாற்போல அணைந்துவிடும்.

ஆகவே அகப்பட்ட பஸ்ஸில் ஏறிக்கொள்ள மக்கள் முந்துவதும் முண்டியடிப்பதும் நியாயம்தான்! எனக்கும் ஒரு இடம் கிடைத்துவிட்டது.

"குரங்கு மலைத்தோட்டத்திலே

போட்ட போடுங்க..... கணக்கன்

குடல் சரியக் குப்புற விழுந்த

பாட்டக் கேளுங்க......"

எங்கோ ஒரு தோட்டத்தில் கணக்குப்பிள்ளை வெட்டுப் பட்ட சங்கதியை பாட்டாக எழுதி அதையே சிறு புத்தகமாகவும் அடித்து, சில அடிகளைப் பாடிக்காட்டி விலை கூறி விற்கின்றார் ஒருவர்.

இடுப்பளவில் தொங்கும் வெற்றிலைத் தட்டில் ஒரு சில்லறைக் கடையே இருக்கிறது. வெற்றிலைக்கடையை கழுத்தில் மாட்டி வைக்கும் அந்தக் கையகலக் கறுப்புப் பட்டியில் கலர்கலராய் வேலைப்பாடுகள் செய்து வைத்துள்ளார். இடையிடையே தொங்கும் ரஸகுண்டுகளுடன் சர்க்கஸ் பபூன் மாதிரி தலையிலே குஞ்சம் வைத்த தொப்பி. கால்களுடன் ஒட்டிப் பிடித்துக்கொண்டிருக்கும் நீள் கால் சட்டை. கணுக்கால்களில் நாட்டியக்காரி போல் மணிச்சலங்கை.

தாளத்துடன் ஒலிக்கும் நாலைந்து வரிகளைக் கத்திப் பாடிக்கொண்டு கால் சலங்கை ஒலி எழுப்ப குதிகாலைத் தரையில் உதைத்து ஊன்றி பஸ்ஸைச் சுற்றி வரும் காட்சி, ஜோடித்த ஒரு சின்னத் தேர் போலிருக்கும்.

பாடிப்பாடி தொண்டை கட்டிக்கொண்ட நேரங்களில், வெற்றிலையைக் கையில் எடுத்து காம்புடன் நரம்பை உரித்து வீசிவிட்டு வட்டமாய் இருக்கும் தட்டிலிருக்கும் சிகரெட் டின்களிலிருந்து கலர் கலராய் ஏதேதோ விஷயங்களைக் கிள்ளி பொட்டுப் பொட்டாய் வெற்றிலையில் வைத்து மடித்து இன்னொரு டின்னிலிருந்து ஒரு கிராம்பை எடுத்து மடிப்பில் குத்தித் தூக்கிக் காட்டி "ஹாய் ஜில்" என்பார்.

ஒரு மலிவான மணம் மூக்கில் ஏற பொட்டுப் பொட்டாய் அவர் கிள்ளி வைக்கும் விதமும், மடித்தெடுத்துக் கிராம்பைக் குத்தும் வித்தையும் பார்த்துக்கொண்டிருப்பவர்கள் ஒரு "ஜில்" வாங்கி மெல்லாமல் விடமாட்டார்கள்.

"ஜில்"காரர் பதுளைப் பக்கங்களில் வெகு பிரசித்தம்.

"ஜில்"காரர் போடும் பாட்டுச்சத்தம் போதாது என்றோ என்னவோ "கண்டி ராஜன்" கதையை சிங்களத்தில் பாட்டாகப் பாடிக்கொண்டு புத்தகம் விற்கிறான் இன்னொருவன்.

தமிழ்ப்பாட்டு எஞ்சின் பக்கம் கேட்டால் சிங்களப்பாட்டு பின் பக்கம் கேட்கும்.

"எஸ் கண்ணாடி மெசப் பீய, பவுண்டின் பேனா...."

பொட்டணிக்காரனின் காட்டுக்கத்தல்.

"பொம்பாய் நைஸ்...."

"அஞ்சு சதம் டொபி.... அஞ்சு சதம் டொபி....."

பஸ் ஸ்டாண்ட் வியாபாரிகள் அத்தனை பேரினதும் கூச்சல், பேரம் பேசுவோரின் வினயம்! பயணிகளின் சலசலப்பு ஆகிய இத்தனைக்கும் மத்தியில் "தர்மஞ் சாமி" என்ற குரலும் சன்னமாய்க் கேட்கிறது. கிணற்றுள் இருந்து கேட்பது போல்!

இந்தாப்பா ஒரு பாக்கட் சிகரெட் குடு" என்றவாறு ஒரு ரூபாயை நீட்டினேன்.

நான் கேட்ட சிகரெட் இல்லாததால் கையை அபிநயத்துடன் ஆட்டிக் காட்டிவிட்டு பஸ்ஸின் மறுபக்கம் மறைந்து விட்டான் நடைக் கடைக்காரன்.

எழுந்து நின்று கால் சட்டைப்பைக்குள் காசைப் போட வசதியோ நினைப்போ இல்லாததால் ரூபாய் வில்லையைக் கையிலேயே வைத்துக்கொண்டேன்.

"தருமஞ் சாமி"

பஸ்ஸின் மறுபக்கத்தில் அதே மெல்லிய குரல்.

"அட ராமா, பிச்சையா கேட்கின்றாய்! இந்தச் சத்தத்தில் நீ இவ்வளவு மெதுவாகக் கேட்டால் யார் காதில் விழும். சற்றுப் பலமாகக் கத்தேன்."

பஸ்ஸுக்குள் ஒருவர் கருணையாய்ப் பேசினார்.

மற்றவர்களுக்குக் கேட்காவிட்டாலும் அவனுடைய பரிதாபக்குரல் அவருக்குக் கேட்டிருக்கிறது. ஆனால், கை மட்டும் சட்டைப்பை பக்கம் நகரவில்லை. கையை எடுத்தால் விழுந்து விடுவோம் என்ற எண்ணமாக இருக்கும்.

பிச்சைக்காரனுடைய கண்கள் ஆர்வத்துடன் அவரைப் பார்க்கின்றன.

அவரை என்பதைவிட அவருடைய கையை என்பதே சரி.

பலமாகக் கத்தினால் சிலவேளை போடுவாரோ எண்ணி யவன் பலமாகக் கத்த முயன்றான்.

வாய் பெரிதாகத் திறபட்டது. கழுத்து நரம்புகள் ஒரு வினாடி விண்ணென்று நின்று தளர்ந்தன. ஆனால், சத்தம் பெரிதாக வரவில்லை.

கத்துவதற்கும் தெம்பு வேண்டாமா?

"சிலுக்... சிலுக்..." கையிலிருந்த தகரக்குவளையை குலுக்கினான்.

அவனைவிட அது பலமாகச் சத்தமிட்டது.

"ஐயோ பாவம்... சாப்பிட்டு எத்தனை நாளாயிற்றோ!" பஸ்ஸுக்குள் இன்னொருவர்.

"என்ன யார் பாவம்கறீங்க...?"

"இவனுகளுக்குப் போய் பாவம் பார்க்கலாமா? தகரச்சுண்டு போடுற சத்தத்திலேயே தெரியலயா அதில் எவ்வளவு கெடக்கு துன்னு... பத்து ரூபாய்க்குக் கொறையாது சார்....! எடுக்கிறது மட்டுந்தான் பிச்சை. அந்திக்குப்பாத்தா கள்ளுக்கடையே இவனுக கூட்டமாய்த்தானிருக்கும்....."

"நீங்க சொல்றது வாஸ்தவங்க.... நேத்து முந்தா நாள் பேப்பர்ல பாத்தீங்களா... காருல அடிபட்டுக் கெடந்த ஒரு பிச்சக்காரனைத் தூக்கி வேன்ல ஏத்தையில சட்டைக்கு உள்ளே கத்தை கத்தையா வைத்திருந்தானாம்... பத்தாயிரத்துக்கு மேலே..."

"ஞாயந்தானங்களே... ஏன் வைத்திருக்க மாட்டானுக...! இன்கம்டெக்ஸ் தொல்லையில்லாத வருமானமாயிற்றே."

நாலைந்து பேராகச் சேர்ந்துகொண்டு ஏதேதோ பேசினார் கள். பிச்சைக்காரனை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை.

அவர்களுடைய பேச்சு எழுப்பிவிட்ட ஆர்வத்தில் அவனுடைய தகரக்குவளையும் அவனையும் பார்க்க வேண்டும் என்னும் ஆசை எழுந்தது.

இந்தப் பக்கமும் வருவான்தானே என்று எண்ணிக் கொண்டிருக்கையில்...

"ஐயா புண்ணியவான்களே" என்றபடி தகரக் குவளையைக் குலுக்கினான்.

சத்தம் சற்றுக் கனமாகவே இருந்ததால் அவர்கள் பேசிக் கொண்டதிலும் நியாயம் இருக்கலாம் என்ற ஆர்வத்துடிப்பில் அவனைக் கூடப் பார்க்காமல் குனிந்து குவளையைப் பார்த்தேன்.

பகீரென்றது!

சத்தம் வரவேண்டுமே என்பதற்காக ஆறேழு கூழாங்கற் களைப் போட்டு வைத்திருந்தான் குவளைக்குள்.

அவனுக்குத்தான் சத்தம் போட முடியவில்லை. அதாவது சத்தம் போட வேண்டாமா!

ஐயோ! பாவம் என்ற உணர்வுடன் அவனை ஏறிட்டுப் பார்த்தேன்.

அவனுடைய கையிலிருந்த தடிக்கும் அவனுக்கும் வித்தி யாசமே இல்லை. கால்சட்டை ஆயிரங்கந்தல். சட்டை அவனு டைய உடலை மறைப்பதற்குப் பதிலாக அந்த எலும்புக்கூட்டை ஒளித்தும் மறைத்தும் கோரமாக்கிக் காட்டியது.

கயிறு கயிறாய்த் தொங்கிய கால்களில் முடிச்சு முடிச்சாய் முட்டி நின்ற எலும்புகள். கன்னத்திலும் கழுத்திலும் மேடு கட்டி நின்ற எலும்புக்கடியில் கறுமையாகப் படர்ந்த நிழல் அவனைப் பிரேதமாக்கிக் காட்டியது.

"உஸ்ஸ்"

பிச்சைக்காரன் மிகவும் ஆயாசமாகப் பெருமூச்சு விடுகின்றான்.

இப்போதோ இன்னும் சற்று நேரத்திலோ என்றிருக்கும் அவனைப் பார்க்க எனக்கு மனதை என்னவோ செய்தது.

கையில் இருந்த ஒரு ரூபாயை ஒரு முறை பார்த்துக் கொண்டேன்.

சிகரெட் இருந்திருந்தால் இந்நேரம் பாதி புகைந்து போயி ருக்கும்.

தொலையட்டும் பாவம் என்று எண்ணியபடி ரூபாவை அவனிடம் நீட்டினேன்.

“மாத்த இல்லீங்க சாமி.....”

“சரி சரி. வச்சுக்கோ” என்றேன்.

மெலிந்து நசுங்கிப்போன முகம் காட்டிய நன்றி! கண்களில் மலர்ந்த ஒரு ஜீவன்! மற்றவர்களிடமும் ஏதோ முனகுவது தெரிகிறது.

காது செவிடு படும்படிக் கத்தினாலும் இந்த உலகம் கவனிக்காதே, இவன் என்ன இப்படி....

“உங்க மாதிரி நாலு பேர் போட்டா நாலு ரூபா சார். பத்து பேர் போட்டா என்ன ஆச்சு...”

எனக்கு மிக அருகில் நின்றவர் பொருளாதாரம் கதைத்தார்.

“இந்தப் பயலுகளுக்கெல்லாம் இரக்கம் காட்டக் கூடாது சார்.... வட்டிக்குக் கொடுக்கிறானுகள்.....”

முன்னவனுக்கு ஒத்துப் பாடினார் இன்னொருவர், தானம் ஒன்றும் கொடுக்காத காரணத்தால்.

“நாலுபேர் போட்டால்தானே நாலு ரூபாயாகும். இந்தப் பெரிய கூட்டத்தினுள் அவனுக்கு மனமிரங்கி ஒரு ஐந்து சதம் யார் போட்டார்கள்” என்று எண்ணி அமைதியானேன்.

பஸ் கிளம்பிவிட்டது.

இன்று தீபாவளி.

கிழக்கு வெளுக்கும் முன்பதாகவே தோட்டம் வெளுத்துக் கொள்கிறது. லயங்கள் வெளிச்சம் காட்டுகின்றன.

விடியும்முன் குளித்துவிட வேண்டும் என்னும் வேகம் தலையில் தண்ணீரை அள்ளி ஊற்றிக்கொள்ளும் அவசரத்தில் தெரிகிறது.

லயத்தின் ஒவ்வொரு காம்பிராவுக்கு முன்னும் ஒவ்வொருவர் அல்லது இரண்டு பேர் குளித்துக்கொண்டிருக் கின்றனர்.

குளிருக்குப் பயந்தவர்கள் அல்லது வாளி வாளியாகத் தண்ணீரைச் சூடாக்கிக் கொள்ளப் போதுமான அளவிற்கு விறகு வைத்திருக்க வசதியுள்ளோர் தவிர்த்த மற்றவர்கள் வெடவெட வென்று நடுங்கிக்கொண்டு வேக வேகமாகத் தண்ணீரை மொண்டு ஊற்றிக்கொள்ளுகின்றனர்.

சுட்டு வைத்த பலகாரம், வாங்கி வைத்த பட்டாசுக்கட்டு ஆகியவைகளை நாளைக்கு நாளைக்கு என்று நேற்று வரை எதிர்பார்த்த சிறுசுகளுக்கு தூக்கமா வரும்.

தட்டித்தட்டி எழுப்பினாலும் சுருண்டு சுருண்டு படுப்ப வர்கள் இன்று வெளிச்சம் வரும் முன்பே எழுந்துவிட்டனர்.

ஆளொன்றும், கொள்ளிக்கட்டை ஒன்றும் பட்டாசுக்கட்டு ஒன்றுமாக வெளியே வந்து "லைசன்" கல்லில் அமர்கின்றனர்.

பெற்றவர்கள் குளித்து முடித்து பிள்ளைகளை ஏசிப்பேசி இழுத்துக் குளிப்பாட்டி முடிப்பதற்குள் நன்றாக விடிந்துவிடுகிறது.

புதுப்புது சட்டைகள், அழகழகான பூப்போட்ட கவுன்கள் பாவாடைகள், தலை அலங்காரங்கள் இத்தியாதிகளுடன் சின்னஞ்சிறுசுகள் பட்டுப் பூச்சிகளாய்த் திரிகின்றனர்.

ஒரு கடி கடித்துவிட்டு பனியாரங்கள் வீசப்படுகின்றன. லயத்து நாய்கள் பாடு வேட்டைதான்.

இந்த நாய்களுக்குள்ள மகிழ்ச்சியாவது இந்த தீபாவளி தினத்தன்று அந்த அநாதைச் சிறுவனுக்குக் கிடைக்குமா? வடையும் பாயாசமும் வேண்டாம்! வயிறார ஒருவேளை சாப்பாடாவது கிடைக்குமா?

அடக்கடவுளே!

கடவுளா? அப்படியும் ஒருவர் இருக்கின்றாரா? இருந்தால் இப்படி எலும்பும் தோலுமாக பேசக்கூட சக்தியில்லாமல் ஒரு அநாதை இருப்பானா?

ஆமாம். கடவுள் இருக்கின்றார்தான்! உயர்ந்த ஓட்டு வீட்டுக் கருகே ஓட்டைக்குடிலும் இருக்கத்தான் வேண்டும் என்பது அவர் சித்தம். மனிதனுக்குப் புரியாத புரிந்துகொள்ள முடியாத ஒரு புதிர் கடவுள்.

அநாதையாக, பிச்சைக்காரனாகத்தான் அவன் இருக்க வேண்டும் என்பது கடவுள் சித்தமானால் நான் செய்தது தப்பா? ஒரு ரூபாயைத் தருமமாக அவனுக்குப் போட்டிருக்கக் கூடாதோ!

என்னைப்போலவே மனமிரங்கி எல்லாரும் அவனுக்குத் தருமம் செய்திருந்தால்.....!

அவன் பாடு எதேஷ்டம்தான். வருவாய்க்குத் தகுந்த செலவில்லாததால் கையிருப்புக் கூடும். இருப்புக்கூடினால்......

குடியும் கூடா நட்பும் பெண்கள் சேர்க்கையுமாக......

ஐயோ! அம்மாதிரி பாபச் செயல்களில் அவன் ஈடுபடா திருக்கத்தான் கடவுள் அவனை அப்படி அலையவிட்டாரோ!

மனதை அடக்கி ஆளும் சக்திக்கேற்பத்தான் மனிதனுக்கு அந்தஸ்த்தைக் கொடுக்கின்றாரோ.....!

ஆட்டுக்கும் வாலை..... என்பதெல்லாம் இதுதானோ?

அவர்கள் பேசிக்கொண்டதுபோல் வட்டிக்குக் கொடுக்கும் அளவுக்கு அவனிடம் பணம் இருக்குமோ!

சேச்சே, என்ன பைத்தியக்காரத்தனம்! அவன் ஏன் குவளையில் கல்லைப் போட்டுக் குலுக்க வேண்டும்.

அவனுடைய எக்கிய வயிறும் எலும்புக்கூட்டுத் தோற்றமும் அப்படித் தோன்றவில்லையே!

அவனிடம் அளவுக்கதிகமாக ஒன்றும் இருக்கக்கூடாது என்பதுவும், பிச்சைக்காரனாக அநாதையாகத்தான் இருக்க வேண்டும் என்பதுவும் ஆண்டவன் சித்தம் என்று கூறுவது ஓட்டைக்குடில் இருந்தால்தான் ஓட்டு வீட்டுக்குப் பெருமை என்பதைத் தவிர வேறில்லை.

உளுத்துப்போன மரங்களுடன் நிற்கும் குடிலுக்கு ஓடு வேய்வதால் பயன்.

சம்பந்தா சம்பந்தமில்லாமல் என் மனம் குழம்பி அலை மோதுகிறது.

நேற்று தீபாவளி!

மக்களிடையே பண்டிகை மவுசு இறங்குகிறது.

“இனி எப்போ?” என்னும் கொக்கியை முகத்தில் ஏந்திக் கொண்டு ஏங்கி நிற்கும் அம்மாவிடம் கூறிக்கொண்டு நானும் பயணம் வைத்து விட்டேன். பஸ்ஸை விட்டிறங்கியதும் பஸ் ஸ்டாண்டை ஒரு நோட்டம் விட்டேன்.

பிச்சைக்காரச் சிறுவனைக் காணவில்லை.

“என்ன தீபாவளி விசிட்டா?”

பஸ் ஸ்டாண்ட் ஹோட்டல் முதலாளி பிடித்துக் கொண்டார்.

உத்தியோகம் என்று ஊர் மாறிப் போய்விட்டாலும் பாட சாலை நாட்களிலிருந்தே முதலாளியைத் தெரியும். அந்தப் பழக்கம்தான்.

அவரைப் பார்த்துச் சிரித்தபடியே உள்ளே நுழைந்தேன்.

"பையா ஒரு நாக்காலி கொண்டா" என்று அவர் பக்கத் திலேயே என்னை அமரச் செய்து வரவேற்கின்றார்.

இந்த அன்பிற்காவது நான் அவருக்கு ஒரு வியாபாரம் கொடுக்க வேண்டும்.

ஒரு பழம் தின்று தேநீர் குடித்துவிட்டு ஒரு ரூபாவை மேசை மேல் வைத்தேன்.

முதலாளியின் வீட்டில் போய் தேநீர் அருந்தினால் பணம் கொடுத்து விட வேண்டும். அவன் பிழைப்பு அது!

என்னுடைய ஒரு ரூபாவைப் பார்த்ததும் முதலாளி சொன்னார், "யாராவது பிச்சைக்காரன் நிக்கிறானான்னு பாருங்க" என்றார்.

எனக்கு முகத்திலடித்தது போல் இருந்தது! நட்பு முறையில் தேநீர் அருந்திவிட்டு பணம் கொடுப்பதனால்தான் அப்படிச் சொல்கின்றாரோ என்று திகைத்தேன்.

"என்ன அப்படிப் பாக்குறீங்க... உங்களுக்கு விஷயம் தெரியாது இல்லியா..." என்றார்.

அதே நேரம் ஆளுயரத்துக்குத் தூக்கி தேநீர் ஆற்றிக் கொண்டிருந்த தேநீர் அடிப்பவர் ஆற்றுவதை நிறுத்தாமலே, "உதைக்கணும் சார் இந்தப் பிச்சைக்காரப் பயல்களை. நல்லாவே பாசாங்கு பண்ணக் கத்துக்கிட்டானுகள்" என்றார்.

நான் மேலும் விழிக்கவே முதலாளி தொடர்ந்தார்.

"வந்து பாருங்க சார், முந்தாநாத்து சாயந்தரம் இந்நேரம் இருக்கும். நம்ம மாடி வீட்டார் இருக்காருல்ல, அவரு சிற்றுண்டி பண்ணிட்டு வந்து பில்லோட ஒரு ரூபாவை மேசை மேலே போட்டாரு. அப்பப் பார்த்து ஒரு பிச்சைக்காரப் பய சாமீன் னான்... பொறுடான்னு அவனை அதட்டிப்புட்டு இவரை செட்டில் பண்ணிடலாம்னு பில்லை கையில் எடுத்தேன். அப்பப் பார்த்து டெலிபோன் அடிச்சுது. பொறுங்க கொஞ்சமுன்னு மாடி வீட்டாரை நிப்பாட்டிவிட்டு டெலிபோனை ஆன்சர்

பண்ணினேன். டெலிபோனை முடிச்சிட்டு மேசையைப் பாத்தா பில் மட்டுந்தான் கெடக்கு ரூபாவைக் காணலே. பிச்சைக் காரப்பய என்னடான்னா நாலு வடை குடுங்க சாமீன்னு ரூபாவை நீட்டிக் கிட்டிருக்கான்... எப்படி இருக்கு வெளை யாட்டு. அவனுக்கு என்ன துணிச்சல் இருக்கணும் பாருங்க....."

"ஐயோ பாவம்" என்று நான் முனங்குவதையும் கவனி யாமல் முதலாளி தொடர்ந்தார்.

"ஏதுடா காசுன்னேன்... பஸ்ஸீல ஒரு புண்ணியவான் போட்டாருங்கன்னான்... விட்டேன் ஒரு அறை..."

அவர் என்னை அறைந்ததுபோல் இருந்தது. "நீங்களே சொல்லுங்க சார், இந்தக் காலத்துல எவனாவது ஒரு ரூபாவை பிச்சைக்காரனுக்குக் கொடுப்பானா...?"

முதலாளி என்னிடமே கேட்கின்றார்! நான் பேயறைந்தவன் போல் நின்றேன்.

"போடா திருட்டு நாயேன்னு தள்ளிவிட்டேன். பொத் தென்னு விழுந்துட்டான். மனுச சபலம் விடுமா! மெதுவா எந்திரிச்சு கன்னா பின்னான்னு கெஞ்சிக்கிட்டு நின்னான். போறானே இல்லை..... அதுக்குள்ளாற அதோ அந்த சர்வர் பையன் வந்து "போடா அயோக்கிய ராஸ்கல்னு" கழுத்தைப் பிடித்துக்கொண்டுபோய் வெளியே தள்ளிவிட்டான்....."

முதலாளி கூறிக்கொண்டே இருந்தார். நான் எழுந்து கனவில் நடப்பவன் போல் நடந்துவிட்டேன்.

உளுத்துப் போயிருக்கும் ஓட்டைக் குடிலுக்கு ஓடு போடப் போய் குடிலையே உடைத்துவிட்ட குற்றத்துக்காக மனம் என்னை வதைத்தது.

பிச்சைக்காரன் நல்லவன்!

முதலாளியும் நல்லவர்தான்!

ஆனால், பொல்லாதது எது? இருவருக்கும் முன்னிருக்கும் அந்த ஆடையா?

(மல்லிகை, 1961)

★

## பயணம்

தபாலாபீஸ் மணிக்கூடு ஒரு முறை அடித்து ஓய்ந்தது. மணி ஒன்று. உச்சிப் பொழுது.

தரையின் சூடு கண்ணுக்குப் பட்டும் படாமலும் மின்னி மேலேறிக்கொண்டிருந்தது.

உஷ்ணத்துக்கே உரித்தான தூசிமயமான ஒரு ஜிகினாச் சூழ்நிலை அந்தப் தபாலாபீஸ் சந்தியில் நிறைந்திருந்தது. முன் பெல்லாம் பொட்டலாகக் கிடந்த அந்த இடத்தில் இப்போது மூலைக்கொன்றாய் பஸ் ஸ்டாண்டுகள். தகரக் கூரையும் கூரைக் கடியில் பிதுங்கும் கியூவுமாய், 'கொழும்பு' பஸ் ஸ்டாண்டிலிருந்து 'குட்டியாக்கொலை' ஸ்டாண்ட் வரை அதற்குள்தான் எங்காவது ஒரு மூலையில் இருக்கும். மொத்தத்தில் அதுதான் பதுளையின் சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட்.

பஸ் ஸ்டாண்டில் நாம் பார்க்கும் முகங்கள் எல்லாமே சூட்டுக்கல்லில் கிடக்கும் ரொட்டி போலத்தான் இருக்கின்றன. காய்ந்து கருகிப்போய்!

'சீனாக்கொலை' பஸ் ஸ்டாண்டிலும் கியூ வெடித்துக் கொண்டுதான் இருக்கிறது. ஆலிஎலை போகும் ஒருவரும் அதற்குள் திணிந்து கொண்டிருக்கிறார்.

கண்டக்டர் தன்னை ஏற்றிக்கொள்ளமாட்டார் என்பது அவருக்கே தெரிந்திருக்கலாம். பதினெட்டு இருபது மைல் என்று பயணம் செய்பவர்கள் போட்டி போட்டுக்கொண்டு நிற்கையில் இந்த மூன்று மைல் காரருக்காகவா இடம் கொடுக்க போகிறது!

கியூவின் முதல் ஏழெட்டு ஆட்களும் சிங்களவர்கள். அதுவும் நடுத்தர வயதுக்கும் கொஞ்சம் மேற்பட்ட பெண் மணிகள். பெண்மைக்குரித்தான மென்மையும் கூச்சமும் கழன்று விட்ட வயது.

வெற்றிலை மெல்லலும்! துப்பலும்! சலசலப்புமாக யாரையும் லட்சியம் பண்ணாத தன்மையுடன் அவர்கள் நிற்கின்றனர். பிந்தி வரும் அவர்களுக்கு வேண்டியவர்கள் அவர் களுடன் கொஞ்ச நேரம் பேசிச் சிரித்துவிட்டு கம்பிக்குள்ளாக நுழைந்து அவர்களுக்குப் பின்னால் நின்றுகொள்கின்றனர். அப்படியே நுழைந்து நுழைந்து முன்வரிசைக்குள் மட்டுமே மூன்று வரிசை ஆட்கள் திமுதிமுக்கிறார்கள்.

ஒவ்வொரு வரிசைக்குள்ளும் மும்மூன்று வரிசையாக இரண்டரை வரிசைகள் இறுக்கிக்கிடக்கின்றன.

குட்டிச் சாக்குகள், பிரம்புக்கூடைகள், பிள்ளைகள், பெண்கள், ஆண்கள், அத்தனையும் ஒன்றுடன் ஒன்று நசுங்கி நைகின்றன.

"இந்தாப்பா ஒரு வார்லி போத்தல் குடு சுருக்குனா....."

அதற்காகவே காத்திருந்தவன் போல் 'டஸ்' என்று மூடியை அடித்து ஒரு பிளாஸ்டிக் கிளாசை போத்தலில் மாட்டி நீட்டு கின்றான் பார்லிப் பையன்.

கிளாசை நிரப்பி தன்னிடம் நின்றுகொண்டிருந்த வயதான தாய்க்குக் கொடுத்தான் வாலிபன்.

நாலு வாய் குடித்தவள் உதட்டைக் கோணிக்கொண்டாள். கிளாசை திருப்பி நீட்டிவிட்டு நெற்றியை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். தலை நோவு தாங்க முடியவில்லை.

மீதி இருந்த பார்லியில் ஏழெட்டுப் பத்து வாய்கள் நனைந்து கொண்டன.

வெளியே காற்றாட நிற்பவர்களே கருகித் தீயும்போது இதற்குள் அமுங்கிக் கிடப்பவர்கள் பாடு எப்படி இருக்கும்.

ஒருவர் மூச்சு மற்றவரை அனலாய்த் தீய்க்கிறது. கழுத்தைச் சுற்றி வியர்வை கசகசக்கிறது. உடலின் வியர்வையில் சட்டை பிசுபிசுவென்று ஒட்டிக்கொள்ளுகிறது. கம்கட்டு ஊறி ஒரு அசௌகரியத்தை உண்டு பண்ணுகிறது. ஆண்கள்தான் மார்பை திறந்துவிட்டு காற்றூதிக் கொள்கின்றனர். பெண்கள்..? ஆக ஒவ்வொரு வினாடியும் ஊசி முனையில் நிற்பது போன்ற துடி துடிப்புத்தான்.

ஆலிஎலைக்காரர் நம்பிக்கை இழந்து நைசாக நழுவப் பார்க்கின்றார். வெளியேறுவது சிம்ம சொப்பனமாகின்றது.

நெருக்கல்கள், கால்மிதியல்கள், முறைத்தல்கள், அசட்டுச் சிரிப்புகள், அத்தனைக்கும் மத்தியில் வீல் என்று கத்துகிறது ஒரு இரண்டு வயதுப் பிஞ்சு.

ஆனானப்பட்டவர்களே வெதும்பிச் சோரும்போது இந்தப் பச்சைச் சிசு என்ன செய்யும் துவண்டு சாய்கிறது. காற்றோட்ட மாக இருக்கட்டும் என்று இடுப்பில் இருந்ததைத் தூக்கி தோளில் கிடத்துகின்றாள் பெற்றவள். கழுத்தில் கிடக்கும் அழுக்கேறிய நூல் கயிற்றின் பெரியமுடிச்சை சுவைக்கிறது சிசு.

“கயித்தை சுவையாதே ஆத்தா” என்றவாறு குழந்தையைத் தோள்மாற்றிக்கொண்டதுடன் கயிற்றையும் ரவிக்கைக்குள் தள்ளி மறைக்கின்றாள்.

தாலிக்கயிறு தனியாகத்தான் இருக்கின்றது. அதில் தங்கம் இல்லை.

கியூவுக்கு வெளியே அவன் குட்டிச் சாக்கை கயிற்றால் கட்டிக் கொண்டிருக்கின்றான்.

“யாங்க கைப்புடி உட்டுறிச்சோ?”

ஆமாம் என்பதற்காக தலையை ஆட்டியவன் “இப்படி சுத்திக் கட்டித்தர்றேன் தூக்கிணுபோயிறு. நான், அஞ்சு மணிக்கு ஆளுகளை விடயில ஆத்தாளைப் பார்த்துவிட்டு இசுக்கோத்து தேத்தண்ணி வாங்கிக் குடுத்துட்டு ஆறுமணி பஸ்லே வந்துடு றேன்”.

அவன் குட்டிச்சாக்கை கட்டி நிமிர்ந்ததும் அவள் பிள்ளையை நீட்டுகின்றாள்.

“பாப்பாவை வெளியேனாச்சும் வச்சிக்கிடுங்க. இங்கே வெந்துத் தொலையுது.”

"ஆசுருபத்துல ஆளு இருக்கோ?" சம்பாஷனையைக் கேட்டுக் கொண்டிருந்த முன்வரிசைக் கிழவியின் கேள்வி இது.

"அரிசி வாங்குனீகளோ..."

"அரிசிக்கெல்லாம் நாங்க வதளைக்கு வாறதில்லை. நாட்டு லேருந்து கொண்டாந்து தருவானுக. வெங்காயம், பருப்பு, பயறு எதாச்சும் பாத்துக்கிட்டுப் போவலாம்ணு வந்தேன்."

"கோப்புறட்டுலே குடுக்குறதில்லையே?"

"ப்க்கும் 'கட்டவளை' கோப்புறெட்டுல மூச்சு காட்டே துன்னுட்டானுக. 'தீகொலை' கோப்புறேட்டுல வச்சுகிட்டே இல்லேன்னுட்டானுக தீஞ்ச மூதேவிக..... இங்கதான் இம்புட்டு இம்புட்டா பத்துக் கடயில பிச்சை வாங்கென வாங்கிச் சேத்தேன்..." கையை குழித்துக் காட்டுகின்றாள்.

மணி ஒன்று பதினைந்தாகிறது. ஒன்றரை மணி பஸ்சை இன்னும் காணவில்லை.

வெள்ளைக்கவுனும் சப்பாத்துமாக நாலைந்து ஸ்கூல் பிள்ளைகள் ஓடிவந்து வரிசைக்குள் மறைகின்றனர்.

மற்றவர்களின் இடுப்பளவுக்கு நிற்கும் ஒரு சிறுவன் கத்து கின்றான். அவனுக்கு மூச்சு முட்டித் திணறுகின்றது.

கியூவுக்குச் சிறியவனாகவும் தூக்கி வைத்துக் கொள்ளப் பெரியவனாகவும் இருப்பதே அவனுடைய பிரச்சனை.

இந்த மக்களின் பிரச்சனைகள் போல் அதுவும் அவனு டைய எந்தவித முயற்சியாலும் தீர்க்க முடியாதது! அவன் கியூவில் நிற்கும் மற்றவர்கள் அளவுக்கு வளர்ந்துவிட வேண்டும் அல்லது சிசுவாகி யாராவது ஒருவருடைய இடுப்பிலோ தோளிலோ ஏறிக்கொள்ள வேண்டும். இரண்டுமில்லாவிட்டால் யாராவது வளர்ந்தவர்கள் அவனைத் தூக்கி வெளியே வீசி விடவேண்டும். இல்லாவிட்டால் அவன் இப்படியே நசுங்கி கத்திக்கொண்டிருக்க வேண்டியதுதான்.

தோளில் இருக்கும் வாண்டு ஒன்று நிலக்கடலைத்தோலை உரித்து பக்கத்தில் நிற்பவர் தலையில் போட்டுக்கொண்டே இருக்கின்றது. அவரும் தட்டிவிட்டுக்கொண்டே இருக்கின்றார்.

ஒரு இளவட்டம் சட்டையைக் கழட்டி கம்கட்டில் திணித்துக்கொள்கிறது.

மணி ஒன்று முப்பது. கியூவில் நிற்கும் கூட்டத்தில் ஒரு சலசலப்பு.

அதோ பஸ் வருகிறது!

என்னமோ வாரிக் கட்டிக்கொள்ள வருவதுபோல்தான் கண்மண் தெரியாமல் வந்து சட்டென்று பிரேக்கடித்து நிற்கின்றான் பஸ்காரன்.

'தகதக'வென்று மிதந்துகொண்டிருந்த தூசி புழுதிப் படலமாகக் கிளம்பி கியூவில் நின்றவர்களின் கண், காது, வாய், மூக்கு, செவி ஆகிய துவாரங்களில் நுழைந்துகொள்கிறது. தும்மல்கள், ஏச்சுகள், முனகல்கள் எல்லாம் பொருமி வெடிக்கின்றன.

"எங்கேயோ செறைக்குப் போறது மாதிரிதான்......."

"அப்பாடா இப்பவாச்சும் வந்தானே!...."

ஒன்றைக்குக் கிளம்ப வேண்டியவன் ஒன்றைக்காவது கியூவிடம் வந்தானே. இத்தனை ஜனங்களுக்கும் எப்போது டிக்கெட் எழுதுவது! எப்போது ஏற்றுவது! எப்போது கிளம்புவது!

சுறுசுறுப்பான கண்டக்டர் என்றால் இன்னும் ஒரு அரை மணித்தியாலம் வைத்துப் பார்க்கலாம். இவனுக்கு பென்சில் பிடிக்கவே தெரியாது. எழுத்தாணி பிடித்து எழுதியே பழகி விட்டவன். மூன்றுக்குத்தான் கிளம்புவான்.

"ஒன்றைக்கே போயிறுவான்று ஒரு வாய் தேத்தணிக் கொட ஊத்திக்கிறாம ஓடியாந்தேன்..."

"மயக்கம் கியக்கம் போட்டுறாதே, இந்தச்சன நெரிசல்லே அது வேறெ நசல்...."

முழங்கால் மடிய ஒருகாலைத் தூக்கி முன் இரும்பில் வைத்துக்கொண்டு நிற்கின்றான் கண்டக்டர்.

அங்கே நடக்கும் நாடகத்தில் அவன்தான் கதாநாயகன். ராஜபார்ட் அனைத்தும்.

"ஆலி எல! அத்தாமெ! கீரியக்கொலை, யாரும் இருந்தா வெளியே போயிறு..."

டிக்கெட் புத்தகத்தைத் தூக்கி ஆட்டியபடி கூறிவிட்டு டிக்கெட் எழுதத் தொடங்கினான்.

முதலாவதாக ஏறிக்கொண்ட அந்த சிங்களப் பெண்கள் சீட் மாறி மாறி அமர்ந்து ஆசை தீர்த்துக்கொள்கின்றனர்.

முதலாவதாக நின்றவர்களைச் சாட்டி கம்பிக்குள் எல்லாம் வசதியாக இடம் பிடித்து உட்கார்ந்துகொள்கின்றனர்.

"மே தெனவா மம லியான்னங் உம்ப சல்லி கணிங்....."

இன்னொரு சி.டி.பி. அவனுக்கு ஒத்தாசை செய்கிறது. ஒருவன் டிக்கெட் எழுத மற்றவன் காசு வாங்குகின்றான்.

விறுவிறுவென்று எழுதிக்கொண்டிருந்தவன் திரும்பி பஸ்சைப் பார்க்கின்றான். அவனுக்குப் பற்றிக்கொண்டு வருகிறது.

கியூவில் பாதி அப்படியே இருக்கிறது. அவனிடம் இப்போது டிக்கெட் வாங்கியவன் ஃபுட்போர்டில் நிற்கின்றான்.

"இந்தா ஓய் பின்னக்குப் போல... இன்னும் போ. தள்ளு நல்லா இன்னம் போ இந்த ஆளெல்லாம் போறதில்லையா....?"

"கண்டக்டர் கத்தினாலும் ஏறியவனால் பின்னுக்குப்போக முடியவில்லை. முன்னால் நிற்பவர்கள் போனால்தானே இவனால் போக முடியும்! போறதா இல்லையா இப்ப...." என்று கத்தியபடி டப்பென்று டிக்கெட் புத்தகத்தை மூடி கம்கட்டில் இடுக்கிக்கொண்டு பின் டயரில் காலூன்றி ஏறி ஜன்னலுக் குள்ளாகப் பிளிருகின்றான்.

"தூணுக்குப் பின்னுக்குப்போ.... இன்னம் கொஞ்சம்போ.... இன்னம் இன்னம் ஏ அம்மா பின்னுக்குப் போகமுடியாட்டி எறங்கு சுருக்குனா... ம்ம்... பஸ்ஸட்ட..."

மறுபடியும் வந்து எழுதத் தொடங்கிவிட்டான். கியூ குறைகிறது. பஸ் திமிர்கிறது.

உள்ளே 'காள்பூல்' என்று கத்தல்கள், சின்னஞ்சிறுசுகள் என்ன செய்யும்? பெரியவர்களாலும் ஒன்றும் செய்ய முடிய வில்லை! அவர்களோ கஷ்டப்பட்டு மூச்சு விடுகின்றார்கள்.

"ஓடுன்னாத்தான் கொஞ்சம் காத்தோட்டமா இருக்கும்...."

'அடச்சீ முதுகுல குந்தாதே'

"செத்த வெலகிக்கிறது எச்சிதுப்பிர்றேன்..."

"இந்த லெச்சணத்துல வெத்தலை வேறயா... அப்படியே நைசா சன்னல்கிட்ட நின்னுக்கிடாதே..."

இப்போது டிக்கெட் வாங்கியவன் ஏற இடமில்லாமல் வெளியே நிற்கின்றான்.

“மே யக்குந்தெக்க மல கறதர” என்று உறுமியபடி பேய் போல் உள்ளே நுழைகின்றான் கண்டக்டர்.

முதன் முதலாக டிக்கெட் வாங்கிக்கொண்டு ஏறிய பெண்களில் இருவர், ஒரு மூன்றாள் சீட்டில் உட்கார்ந்திருக் கின்றனர். சற்று நெருக்கி உட்கார்ந்தால் இன்னும் இருவர் உட்காரலாம்.

“லெடெக் என்ட இன்னவா” என்று அவர்கள் அடம் பிடிக்கின்றனர்.

காதறுந்த பை ஒரு கையிலும் கத்தும் சிறுசு மறு கையிலு மாக ஏறிய பெண் அங்கு தனக்குக் கொஞ்சம் இடம் தருமாறு கெஞ்சுகின்றாள். கையில் குழந்தையை வைத்துக்கொண்டு நெரிசலில் நிற்கும் பரிதாபத்தைக் காட்டி அவர்களை வெற்றி கொள்ளும் முயற்சியில் அவள் ஈடுபட்டு கெஞ்சிக் கொண்டிருக் கையில்தான் கண்டக்டர் நுழைகின்றான்.

“இந்தா அம்மா உள்ளுக்குப் போறதா இல்லையா....” என்று கோபத்தில் அவள் நெஞ்சில் கைப் போட்டுத் தள்ளுகின்றான். அவன் உந்தித் தள்ளிய வேகத்தில் விழப்போனவள் தடுமாறிச் சமாளித்து குட்டிச்சாக்கை கை விட்டு கம்பியைத் தாவிப் பிடித்து நின்றாள்.

சிசு குய்யோ முறையோ என்று அலறத் தொடங்கியது.

மற்றவர்களையும் அப்படியே தள்ளித் தள்ளி லொறியில் செங்கல் அடுக்குவது போல் அடுக்கிவிட்டு வெளியே வருகின் றான் கண்டக்டர்.

அத்தனை சட்டம் பேசியவன் அந்த ‘அட்வான்ஸ் புக்கிங்’ யாருக்கு என்று கேட்கவில்லை. கைக்குழந்தையுடன் அல்லல் படும் அவளுக்கு அதில் கொஞ்சம் இடம் கொடுக்கும்படிக் கூறவில்லை.

அவள் ஒரு தோட்டத்துத் தமிழச்சிதானே?

நிற்பவர்களுக்கு மூச்சுவிட முடியவில்லை. பிடித்துக் கொள்ள இடம் இல்லை. காலூன்ற வசதியில்லை. எங்கேயோ நிற்பவர்கள் எட்டி எங்கேயோ பிடித்துக்கொண்டிருக்கின்றனர்.

அந்தப் பெண்ணும் வாயால் ஊதி ஊதி குழந்தையைக் களைப்பாற்றிக் கொண்டிருக்கின்றாள். எப்போது மயக்கம் போடுமோ எப்போது சாகுமோ தெரியாது.

இன்னும் கொஞ்சம் பேர் ஏறினார்கள், அப்படி ஏறியவர் களில் ஒரு தடியன் நிற்பவர்களை நசுக்கி நெரித்துக்கொண்டு

உள்ளேபோய் அந்தப் பெண்கள் பிடித்து வைத்திருந்த சீட்டில் அமுங்கிக்கொண்டான்.

'அவன்தான் நோயாளியோ" என்று சுற்றி நின்றவர்கள் பொருமிக்கொண்டாலும் அவர்களிடம் வாய் கொடுக்க யாரும் விரும்பவில்லை.

பஞ்சு திணித்த சாக்குப் போல் வாய் வழிய நிற்கிறது பஸ்.

கிளம்பி ஓடாதா! காற்று கொஞ்சம் வீசாதா! என்று விலை யில்லாத காற்றுக்கு ஏங்கினார்கள். அத்தனை பேரும்.

கண்டக்டர் டிரைவரைக் கூப்பிட்டான். கையிலிருந்த சிகரெட்டைக் காட்டினான் டிரைவர். சிகரெட்டை முடித்து விட்டுத்தான் அவன் வருவான். கண்டக்டர் ஒரு 'டீ' அடிக்கப் போனான். உள்ளே இவர்கள் வெந்துகொண்டிருந்தார்கள்.

மணி மூன்று பத்து. அப்பாடா ஒன்றரை மணி கிளம்பி விட்டது.

தபாலாபீஸ் சந்தியில் வட்டமடித்துத் திரும்பும் போதே மற்றவர்களின் எலும்புகள் முறிந்தன.

கை விண்விண்ணென்று தெறிக்கிறது. முதுகு முறிகிறது. இடுப்பு நோகிறது. கால்கள் சூகை பிடித்துக்கொள்ளுகின்றன. எதிலாவது மோதிக்கொண்ட சிறிசுகள் கத்துகின்றன.

டிரைவர் பிறேக் அடிக்கும் போதெல்லாம் உள்ளே இருப்ப வர்கள் உயிரைப் பிடித்துக் கொள்ளுகின்றனர். எங்கே பெரட்டித் தொலைச்சிடுவானோ என்று அல்ல. அப்படி பெரட்டி விட்டாலாவது பரவாயில்லை பஸ்சை விட்டு வெளியேயாவது விழலாம்.

தாகம் ஒன்றும் அதில் உள்ள ஆக்கினையும் இத்தனை கொடுமையாக இருக்க முடியாது.

ஆறுகாமம், அமிர்தவல்லி, ஆளிஎல என்று ஒரு இடத் திலும் நிற்காமல் 'ஜிவ்'வென்று பறந்துகொண்டிருந்தது பஸ்.

அந்தப் பெண்ணின் கைக்குழந்தை தோளில் மயங்கிக் கிடக் கிறது. இன்னும் சாகவில்லை. தன்னுடைய மெலிந்த மார்புக்குள் அதை அமுக்கி அணைத்துக்கொண்டு நிற்கின்றாள் தாய். குட்டிச் சாக்கு எங்கே கிடக்கிறதோ தெரியாது! கம்பியைப் பிடித்துக் கொண்டிருந்த கை ஒடிந்துவிட்டதுபோல் வலிக்கிறது.

பஸ் ஆடு பாலத்தைத் தாண்டியதும் ‘பெல்’ அடிபடுகிறது ‘கீரியக்கொலை’ எல்லாம் ஏத்தமாட்டேன்னானே.... யார் எறங்கப் போறது’ என்று அனைவரும் பார்க்கின்றனர்.

‘ஆலிஎலை அத்தாமி கீரியக்கொலை எல்லாம் வராதே’ கண்டக்டர் தமிழில் சொன்னதன் மர்மம் நமக்கு இப்போது புலனாகிறது.

இவர்கள் சிங்களவர்களாயிற்றே!

பஸ் மீண்டும் ஓடத் தொடங்குகிறது.

தோட்டத்துக் கூட்டம் அதற்குள் பயணம் செய்து கொண்டிருக்கிறது.

இது ஒரு சின்னப் பயணம். பத்துமைல் தூரம் ஓடும் பஸ் பயணம். இதே இந்த மக்களுக்கு இத்தனை சிரமமானதும், சிக்கலானதுமாக இருக்கிறதென்றால் வாழ்க்கை எனும் பெரும்பயணம்.....?

★

# கத்தியின்றி ரத்தமின்றி

அந்த மலைகள் மிகவும் பயங்கரமாக எழுந்து நின்றன. மக்களின் உரிமை உடைமை இத்தியாதிகளை சங்காரம் செய்த தென்னாப்பிரிக்க வெள்ளைக்காரக் கொடுமைகளைவிடக் கோரமானதாகத் தலை விரித்துக்கொண்டு நிற்கின்றன.

உள்ளே எது நடந்தாலும் அதை வெளியுலகுக்குக் காட்டுவதில்லை என்று கங்கணம் கட்டிக்கொண்டதுபோல் அவை அந்தத் தேயிலைத் தோட்டத்தை அரண் செய்து நிற்கின்றன.

அந்த மலைகளின் ராட்சத உடலில் பட்டி பிடித்தாற் போல் மலைகளைச் சுற்றி வரும் செம்மண் பாதையில் கைப்பிரம்பைச் சுழற்றியபடி நடந்துகொண்டிருக்கிறார் தோட்டத்து டிஸ்பென்ஸர். தோட்ட மக்கள் பாஷைப்படி டாக்டரைய்யா!

பையில் ஸ்டெதஸ்கோப்பும் மனதில் துவேஷமும் வெள்ளைக்கார நடை நடந்துகொண்டிருந்த சிங்கள டாக்டரய்யாவைக் கண்டதும் லயத்து நாய்களுக்கு ஒரே குஷி. கூட்டமாகக் குரைத்தபடி ஓடி வந்தன.

கூலிக்காரன் நாய்தானே என்னை என்ன செய்துவிடும் என்ற அசட்டையுடன் நடந்துகொண்டிருந்த அய்யா டக்கென்று நின்றார். பாய்ந்து வந்த நாய்களும் பிரேக் போட்டு நின்றன.

பாதையடியில் நாய் குரைத்த சத்தம் கேட்டு காந்தி படத்துக்கு மாலை போட்டுக் கொண்டிருந்தவன் ரோட்டுப் பக்கம் திரும்பிப்பார்த்தான். டாக்டரையா லயத்துப் படியில் இறங்கிக் கொண்டிருந்தார்.

"செலாங்கய்யா... லயம் பார்க்கவா?"

"ஆமாம், தலைவர் என்ன இன்னைக்கு வேலை இல்லியா...?" என்று கேட்டபடி இறங்கி வந்த ஐயா,

"யாரூட்டு படம் இது... மாலை எல்லாம் போடுறே..." என்று கேட்டார்.

முன்பொரு தடவை அவரே அவனிடம் கூறியிருக்கிறார் 'இந்தியாக்கார ஆளுங்களுக்குக் கொஞ்சம்கூட தேசப்பற்றுக் கிடையாது... இந்த லயம் முழுக்கப் பாரு. ஒவ்வொரு வீட்டிலேயும் காந்தி படம் இருக்கும். நேரு, சுபாஷ் சந்திரபோஸ் படம் இருக்கும். எவன் வீட்லேயாவது நம்ம தலைவரூட்டு படம் ஒன்று இருக்கா. ஒரு சேநானாயக்கா, பண்டாரநாயக்கா கெடயாது... ஆனா சொல்லிக்கிறது மட்டும் இது எங்கள் நாடு. இதுல எங்களுக்கும் உரிமை வேண்டும் அப்படி இப்படின்னு' என்று.

'அய்யாவுக்கு ஏன் இந்த வேண்டியில்லாத வெவகார மெல்லாம். லயம் பாக்க வந்தா லயத்தைப் பாத்துட்டுப் போக வேண்டியதுதானே' என்று நினைத்துக்கொண்டவன் அவரிடம் கேட்டு வைத்தான்: "யாரார் வீட்டுல என்னென்ன படம் மாட்டி யிருக்குன்னும் ஐயா கணக்கெடுக்குறீங்க போல...." என்று.

"அதில்ல தலைவரே, இந்த ஆளுங்களை எல்லாம் புடிச்சு வெறட்டிப்புடனும். இது உங்க நாடு இல்லே... இந்த நாட்டின் தலைவர்கள்லாம் உங்க தலைவர்கள் இல்லே... உன் காந்தி, உன் நேரு இருக்கிற நாட்டுக்கே போடான்னு இவங்களை எல்லாம் புடிச்சு வெறட்டிப்புடனும்..."

"இதேயே தானே உங்கள் தலைவர்களும் சொன்னாங்க... சொல்றாங்க... சொல்லப்போறாங்க... 'நீங்கல்லாம் எங்க நாட்டு மக்கள் இல்ல. நீ எல்லாம் ஓடிப்போ... இந்த நாட்டுல உங்களுக்கு எதுவும் கிடையாதுன்னும், கடைசித் தமிழனையும் இந்த நாட்டை விட்டு கப்பலேற்றிய பிறகுதான் எனக்கு சாவே வரும்' என்றும் சங்கல்பம் செய்து கொண்டவர்களுடைய படங்களையெல்லாம் கண்ணாடி போட்டு மாட்டிக்கொள்ள

இவர்கள் என்ன பேடிகளா... எங்களை அடிப்பதற்கு ஆள் கூட்டி வரவில்லை காந்தி. ஆனா, அவர் எங்களுக்காக அடி பட்டிருக்கின்றார். அதனால்தான் அவரை ஏற்றுக்கொள் கின்றோம். காந்தி படத்துக்குப் பிரேம் போட்டு மாட்டிக்கொள் என்று யாரும் இந்த மக்களுக்குக் கட்டளை இடவில்லையே..."

இப்படிச் சுடச்சுட முகத்திலடித்தாற்போல் முன்பொரு தடவை டாக்டரய்யாவுக்கு பதில் கொடுத்தது அவனுக்கு நினைவுக்கு வந்தது.

காந்தியின் படத்தைப் பார்த்து இது யாருடைய படம் என்று கேட்பதன் மூலம் தனக்கும் எனது தலைவர்களுக்கும் பெருமைத் தேடிக் கொள்வதாக எண்ணிக்கொள்ளும் அய்யாவின் அறியாமை அவனுக்குச் சிரிப்பூட்டியது.

"இது யாருன்னு அய்யாவுக்குத் தெரியலையா... அடப் பாவமே! 'மனிதர்கள் தங்கள் நாட்டை நேசிக்கிறார்கள் என்பதால் மற்ற நாட்டை வெறுக்கிறார்கள் என்பதல்ல பொருள்' என்று கூறிய மகாத்மா இவர்தான்."

"மற்றவர்களுடைய தலைவர்களை, மற்ற நாட்டவர்களை வெறுப்பதன் மூலம் மட்டுமே உங்கள் நாட்டை, உங்கள் தலைவர்களை, உங்கள் நாட்டவர்களை நேசிப்பதாக கற்பனை பண்ணிக்கொள்ளும் உங்கள் போன்றவர்களுக்கு உலகத்துக்கே ஒப்பற்றவரான ஒரு மனிதரைத் தெரிய முடியாதுதான்...."

"தெரியாமல் என்ன நல்லாத் தெரியும்... ஏன் மாலை போடு றேன்னுதான் கேட்டேன்..." என்றபடி பேச்சை முடித்துக் கொண்டு தலைவர் வீட்டுக்கோடியில் நுழைந்து அடுத்த லயத்துக்குப் போய்விட்டார் அய்யா.

மேசையில், காற்றில் படபடத்த நோட்டீசை எடுத்து மறுபடியும் பார்த்துக்கொண்டார் தலைவர்.

அவர் சார்ந்துள்ள காங்கிரஸ் கட்சி கொண்டாடும் காந்தி விழா பற்றிய நோட்டீஸ் அது.

பேச்சாளர்கள் வரிசையில் அவருடைய பெயரும் தடித்த எழுத்தில் இருக்கிறது.

தென்னாப்பிரிக்காவிலும் நேபாளம் போன்ற நாடுகளிலும் சிறுபான்மை இந்திய மக்களுக்காக அஹிம்சையுடன் அவர் செய்த அறப்போர் பற்றிப் பேச வேண்டும் என்பது அவருடைய அவா.

முக்கியமாகத் தென்னாப்பிரிக்காவில் அவர் அனுபவித்த கொடுமைகளைப் பற்றி இன்றெல்லாம் பேசலாம்.

காந்தி எழுதிய 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்னும் நூல் மேசையில் கிடக்கிறது. அதை எடுத்து வாசிக்கும் போதே அவருடைய நெஞ்சு உருகியது.

கறுப்பர்கள் நடக்கக்கூடாது என்று தடுக்கப்பட்ட வீதி யொன்றில் தெரியாத்தனமாக காந்தி நடந்தபோது அங்கு காவல் நின்ற போலீஸ்காரன் நேராக அவரிடம் வந்து ஏன் வந்தாய் என்றும் கேட்காமல், ஒரு வார்த்தையும் பேசாமல், 'போய்விடு' என்று கூறாமல் தன்னுடைய பலம் கொண்ட மட்டும் பூட்ஸ் காலால் அவர் நெஞ்சில் எட்டி உதைத்தான்.

இந்தத் திடீர் தாக்குதலால் அவர் நிலைகுலைந்து போனார். அவருடைய நோஞ்சான் உடம்புக்கு போலீஸ்காரனின் முரட்டு உதையைத் தாங்கிக்கொள்ளும் சக்தி கிடையாது. எகிறிப்போய் விழுந்தார். பாதையின் எதிர்ப்பக்கம் இருந்த வெள்ளைக் கல்லில் அவருடைய முகம் மோதி நசுங்கியது.

தன்னைச் சுதாகரித்துக்கொண்டு அந்த இடத்தைவிட்டு எழுந்திருக்க அவருக்குச் சில நிமிடங்கள் பிடித்தன.

வாயில் வழிந்த இரத்தத்தை துடைத்துவிட்டுக்கொண்டார். நெற்றிப் பொட்டு வீங்கிப் புடைத்திருந்தது. எங்கே வலிக்கிறது என்று தெரியாமல் உடல் முழுவதும் நோவு எடுத்தது.

காந்தி உதைபட்ட செய்தி காட்டுத்தீ போலப் பரவியது. அவரை உதைத்தவனைக் கோர்ட்டுக்கு இழுத்துப் பழி வாங்குமாறு அனைவரும் அவரை வேண்டினர். ஆனால், காந்தி மறுத்துவிட்டார்.

"அவனுக்கென்ன தெரியும் பாவம். சாவி கொடுத்து விட்டவன் யாரோ. இவன் ஆடுகிறான். அவன் என்னை உதைத் தான் என்பதல்ல அவமானம். என் சமூகத்தையே உதைத் திருக்கிறான்."

தலைவர் கண்களை மூடிக்கொண்டார். கோடாக நிற்கும் இமை விளிம்பில் மணியாக உருள்வது கண்ணீரல்ல. கரைந்த அவரது உள்ளம்.

ஆஹா! இவரல்லவா மகாத்மா.

கத்தியின்றி, இரத்தமின்றி காந்தி நடத்திய அகிம்சைப் போர்களைப் பற்றித் தன்னால் எவ்வளவு அழகாகப் பேச

முடியும் என்பதைத் தீர்மானித்துக்கொண்ட பிறகே ஜில்லாவிலிருந்து வந்த கடிதத்துக்கு ஒப்புதல் பதில் போட்டார்.

தான் ஒன்றித்துப்போன ஒரு விஷயத்தை மற்றவர்களுக்குக் கூறும்போது உணர்ச்சிப் பெருக்குடன் சொற்பெருக்காற்றலாம் என்ற நம்பிக்கையும் அவருக்கிருந்தது.

இன்று நேற்றா மேடையேறுகின்றார். சொற்பொழிவுக்கு ஒத்துக்கொண்டால் தலைப்பையும் தரும்படி கேட்டிருந்தார்கள் விழாக் குழுவினர். அவர் எழுதி அனுப்பிய தலைப்பைத்தான் விழா நோட்டீசில் அச்சிட்டிருக்கிறார்கள். தலைப்பை நினைக்கையில் அவருக்கு இப்போதும் புல்லரிக்கின்றது.

"கத்தியின்றி ரத்தமின்றி"

**அ**ன்று ஒரே அடைமழை.

வானம் பொத்துக்கொண்டு விட்டதோ என்று ஐயுறும் அளவுக்கு அடித்துக்கொண்டு ஊற்றுகிறது. இந்தப் பூமியே இப்படித்தான். எப்போது பெய்யும் எப்போது காயும் என்று யாராலும் நிர்ணயித்துக் கூற முடியாது.

நோவா காலத்தைய நாற்பது நாள் மழையும் அன்றே பெய்து தீர வேண்டும் என்ற நோக்கத்துடன் அதிகாலையிலே காற்றும் மழையுமாகக் கொட்டத் தொடங்கிவிட்டது.

மலையில் நிற்கும் மரங்கள் ஆடி அழன்று சோபை கெட்டுப் போய் நிற்கின்றன.

கூடையும் தலையுமாக கொழுந்தெடுக்க மலையேறி விட்டவர்கள் குன்னிப்போய் மரத்தடிக்கு மரத்தடி நிற்கின்றனர், நனைந்த கோழிகள் போல் வெளிறிப்போய்.

தடதடவென்று ஓசையுடன் எங்கோ ஒரு சவுக்குக் கிளை முறிந்து விழுகிறது.

"ஏய் புள்ளங்களா ஒருத்தரும் மரத்தடியில் நிக்காதீங்க. வாதேதும் புண்டு விழுந்தாலும் விழும்.... ஆபத்து" என்று கத்திய வாறு நின்றுகொண்டிருந்த மரத்தடியிலிருந்து பெயர்ந்தோடினான் கங்காணி.

கையை நீட்டிக் கொழுந்தெடுக்க முடியாவிட்டாலும் பெயருக்குக்கூட மலையில் நிற்க முடியவில்லை.

ஊன்றி நிற்கும் கால்களும், ஊஞ்சலாடித் தொங்கும் கைகளும் உணர்விழந்து சுரணை கெட்டுப் போய்க் கொண்டிருக்கின்றன. வேறோர் மலையில் வேலை செய்யப் போய் உரப்

பட்டியில் ஒண்டி நின்ற தோட்டத்துத் தலைவர் ஆபீசை நோக்கி ஓடினார்.

கம்பளிச் சட்டையும் தானுமாக கதகதவென்று உட்கார்ந் திருந்த துரை உள்ளிழுத்த புகையை கூரையை நோக்கி ஊதி விட்டு "ஏஸ் தலைவர் என்னா இந்த நேரம்?" என்றார்.

"வேலைவிட்டுறனுங்க. மழை அடிக்கிற அடி தாங்க ஏழாதுங்க. மரம் ஏதும் ஒடிஞ்சு விழுந்தா ஆபத்து...."

"சரி விட்டுறுவோம்... ஆனா இன்றைய சம்பளம்....."

"முழுச் சம்பளம் குடுக்கணுங்க. தோட்டத்துக்கே உழச்ச ஆளுங்கதானே. மழை இப்படி பேயோட்டி முழு நேரம் வேலை செஞ்சுருக்குங்கதானே..."

"சரி, இன்னும் ஒரு அரை மணி நேரம் பார். மழை விடாட்டி எடுத்த கொழுந்தை நிறுத்துட்டுப் போகச் சொல்லு..."

"நல்லதுங்க" என்று ஆபீஸ் படி இறங்கிய தலைவரை துரையின் குரல் நிறுத்தியது.

"கணக்கப்பிள்ளையை ஆபீசுக்கு வரச் சொன்னேன்னு சொல்லிரு உடனே...."

"இப்போது மணி ஒன்பதுதானாகிறது. இப்போதே வேலை நிற்பாட்டி முழுப்பேர் கேட்கிறார்கள். நீ எப்படியாவது பனிரெண்டறுதி கொழுந்தெடுக்கப் பார். அப்போதுதான் பாதிக்குப் பாதியாவது தேறும். ஒரே நேரம் நிறுத்தாலும் பரவாயில்லை... சரி போ"

தொப்பையாக நனைந்தபடி மழைக்கோட்டும் தானுமாக ஆபீசுக்கோடி வந்த கணக்கப்பிள்ளையிடம் துரை இப்படிக் கூறினார்.

பெருமாள் மாடாய் "வெரிவெல் சார்" என்று தலையாட்டி விட்டு மழைக்கோட்டைச் சுமந்தபடி படியிறங்கினார் கணக்கப் பிள்ளை.

முட்டையுடன் ஊரும் கட்டெறும்புக் கூட்டமாய் கூடையுடன் சாரி சாரியாக ஆட்கள் ஊர்ந்து கொண்டிருந்தனர், பெரட்டுக் களத்தை நோக்கி கொழுந்து நிறுக்க.

கைக்கடிகாரம் நனைவதையும் பொருட்படுத்தாமல் மழைக் கோட்டுக்கு வெளியே கையை நீட்டி மணியைப் பார்க்கின்றார் ஆபீசிலிருந்து படியிறங்கிக் கொண்டிருந்த கணக்கப்பிள்ளை.

மறுபடியும் உற்றுப் பார்த்தார். மணி ஒன்பது ஐந்து. இந்த மழையில் ஆட்களை மலையில் நிறுத்தி வைப்பதும் ஒன்றுதான். லயத்துக்கனுப்புவதும் ஒன்றுதான். மலையில் நின்றால் மட்டும் வேலை செய்யவா போகிறார்கள். வேலை செய்யத்தான் முடியுமா?

ஆனால், பன்னிரண்டு மணிக்கு முன்பாக இவர்களை வீட்டுக்கனுப்பிவிட்டால் துரையிடம் தப்பிக்க முடியுமா அவரால்.

சாரைப்பாம்பு போல விர்ரென்று இறங்கினார் குறுக்குப் பாதையில்.

சர்ரென்று ஊற்றிய மழை சப்பாத்துத் தொப்பி மழைக் கோட்டு ஆகியவற்றில் டப்டப்பென்று விழுந்து தெறித்தது.

நீரடித்த காடாய்க் கிடக்கிறது பெரட்டுக் களம்.

ஆட்கள் கூடையும் படங்குமாய் கூனிக் குறுகிக்கொண்டு நிற்கின்றனர்.

"ஏ கங்காணி! ஏன் இதுகளை எல்லாம் இழுத்துக்கிட்டு வந்தே... மணியைப் பார்..." கையை நீட்டிக் காட்டுகிறார். "ஒன்பதே கால்தான். இப்பவே நிறுக்க ஏலாது. ஒன்பதே காலுக்கு நிறுத்து இந்தாளுகளை வீட்டுக்கனுப்பிட்டா ஒங்க பாட்டன் துரை சும்மாருப்பானா... இப்பவே நிறுக்கேலாது. போய் வேலை செய்யச் சொல்லு... ம்ம்... போ... எல்லாம்..." கணக்கர் கத்தினார்.

கணக்கப்பிள்ளை ஐயாவுக்குப் பயந்த ஓரிருவர் கூடையைத் தூக்கித் தலையில் மாட்டினர்.

"ஒருத்தரும் போக வேணாம். போடு கூடையைக் கீழே...." தலைவர் நின்றுகொண்டிருந்தார்.

கணக்கப்பிள்ளை தலைவரை முறைத்துப் பார்த்தார்.

"அய்யா சும்மா மொறைக்காதீங்க தொரைகிட்டக் கேட்டுட்டுத் தான் ஆளுகளை மலையில் இருந்து எறங்கச் சொன்னேன் நான்..."

"வேலை செய்யுற ஆளுகளை மலையில் இருந்து எறங்கச் சொல்ல நீ யார்...? தொரையே சொல்லியிருந்தாலும்கூட நீ வந்து என்கிட்டத்தான் சொல்லியிருக்கணும்"

"இங்க பாருங்கையா" ஒரு பெண் காலைக் காட்டுகிறாள். நாட்டியக்காரி சலங்கை கட்டியது போல் விரல் பருமனில் ரத்தம் குடித்த அட்டைகள் தொங்கிக்கொண்டிருந்தன. இதைக் கவனித்ததாகக் கூடக் கணக்கப்பிள்ளை காட்டிக்கொள்ள வில்லை.

"தொரைதான் போகச் சொல்லிட்டாரே உங்களுக் கென்னய்யா வந்தது... நீங்க கையை ஒடிச்சுக்கிட்டு சம்பளம் குடுக்கிறாப்புல..."

"கையை ஒடிக்கிற காலை ஒடிக்கிற கதை எல்லாம் நம்மகிட்ட வாணாம்... நான் நிறுக்கப் போறதில்லே... நீ எல்லாம் மலைக்குப் போ..."

"நிறுக்காட்டிப் போ... கொஞ்சம் கூட ஈவு இரக்கம் கெடை யாதவன்" என்றபடி ஒருவன் கூடையைக் காலால் எட்டி உதைத்தான்.

கொழுந்து விசிறியடித்தது.

"ஏன்டா பார்த்திகிட்டு நிக்கிறீங்க. கொட்டிட்டு வா..." நாலைந்து இளவட்டப் பையன்கள் கூடையை எத்திவிட்டனர்.

"நிறுக்கப் போறியா இல்லையா..." இது தலைவர்.

"நீ ஆயிரம் காரணம் சொல்லு. நான் நிறுக்கப் போற தில்லே..." இது கணக்கப்பிள்ளை.

"ஆளுங்க எல்லாம் குளிர் புடிச்சுத் செத்தா...?"

"மண்ணும் ஈரமாத்தான் இருக்கு... குழி வெட்ட லேசாத் தான் இருக்கும்"

ஆத்திரம் கொண்ட தலைவரின் கவ்வாத்துக் கத்தி கணக்கப் பிள்ளையின் தோளில் பாய்ந்தது.

கொய்யா மரத்தில் கொத்தியது போல் கணக்கப்பிள்ளை யின் தோள் எலும்பில் கொத்தி நின்ற கத்தியுடன் பிரக்ஞையற்று கீழே விழுந்தார் கணக்கப்பிள்ளை.

ரத்தத்தில் மூழ்கிய கத்தி தனது சிவந்துவிட்ட கண்களால் தலைவரை உற்றுநோக்கிக் கொண்டிருந்தது.

★

# மழலை

திடீரென்றுதான் அது நடந்தது!

எத்தனை பேர் இருக்கின்றோம். யாருமே எதிர்பார்க்க வில்லை.

மம்மி என்று அன்பொழுக அழைக்கப்படும் அம்மா

மிம்மி என்று பாசத்துடன் அழைக்கப்படும் அம்மம்மா.

பெரியம்மா! பெரியப்பா! குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் சாந்தி...

எத்தனை பேர்!

அந்த இரண்டு வயதுக் குழந்தையைச் சுற்றி இத்தனை பேர் இருந்தும் இது எப்படி நடந்தது! எப்படி நடந்தது... எப்படி நடந்தது... என்று எத்தனை தடவை கேட்டாலும் பதில் ஒன்றும் கிடைக்கப்போவதில்லை.

எப்படி என்கின்ற விவரணங்களை எல்லாம் மீறி மேவிக் கொண்டு அது நடந்துதான் இருக்கிறது. அதுவும் திடீரென்று யாருமே எதிர்பார்த்திராத விதத்தில்.

இரண்டு வயதுப் பெண் பிஞ்சின் குஞ்சு விரல்களுக்கு எட்டும் உயரத்தில் குளியலறைக் கதவின் வெளிக் கொக்கி இருந்திருக்கிறது. நடுவிரலால் உந்த, கொக்கி மேலே போய்விட கதவு திறந்து கொண்டு விட்டது.

அம்மாவுடன், அப்பாவுடன், மிம்மியுடன், பெரியம்மாவுடன், சாந்தியுடன் குளியலறையின் உள்ளே போய்க் குளித்த, மேல் கழுவிய, சூவிருந்த, பிஞ்சுக் கைகளில் சவர்க்காரம் குழைத்துக் குதூகலித்த பழக்கத்தில் உள்ளே நுழைந்துவிட்டது குழந்தை.

நுழைந்தது மட்டுமல்லாமல் நுழைந்த வேகத்தில் கதவையும் சாத்திக்கொண்டாகிவிட்டது.

உள்ளே இருப்பது வெளியில் இருப்பது போல் வெறும் கொக்கி அல்ல. பித்தளையிலான உயர் ரக சொய்பர் கொண்டி.

கதவை நிலையுடன் சரிசமமாக அழுத்திக்கொண்டு சொய்பரின் பிடியை நேராக வைத்துத் தள்ளினால் நிலைப் படியில் இருக்கும் மறுமுனைக்குள் சொய்பர் நீண்டு நுழைந்து மூடிக்கொள்ளும்.

'பாப்பா எங்கே...' என்று யாரோ ஒருவர் எழுப்பிய குரல் எல்லோரையும் திடுக்கிட வைத்து விட்டது. எங்கே எங்கே என்று தேடுகின்றார்கள். சின்னதைக் காணமுடியவில்லை.

முன் ஹாலை ஒட்டினால் போல் ஒரு பக்கம் படுக்கையறை. மறுபக்கம் குழந்தையின் விளையாட்டறை. இரண்டுக்கும் இடையில் குளியலறை. குளியலறையின் கதவைப் பூட்டிவிட்டால் உள்ளே நடப்பதொன்றும் வெளியே தெரியாது. இப்போதும் அதேதான்...!

குளியலறைக் கதவில் வெளியே கொண்டி தொங்கிக் கொண்டிருந்தால் உள்ளே யாரோ இருக்கிறார்கள் என்று அர்த்தம்.

சின்னதின் அம்மாவுக்குத்தான் பளீரென அது தெரிய வந்துள்ளது!

வெளியே கொண்டி தொங்கிக்கொண்டிருக்கிறது. கதவைத் தள்ளிப் பார்த்தால் உள்ளே கொண்டி போடப்பட்டிருக்கிறது!

'அம்மா நான் உள்ளி...' என்னும் உற்சாகமான மழலை வெளியிலிருப்போரின் காதுகளில் நாராசமாய் நுழைகின்றது.

படபடவென்று தட்டிப் பார்க்கிறார்கள். தள்ளிப் பார்க் கிறார்கள். கதவு பூட்டப்பட்டிருக்கிறது.

எப்படி! அதுதான் தெரியவில்லை!

சின்னதின் கடமைகளுக்காக மட்டுமின்றி, பெரியவர்கள் குறிப்பாக சின்னதின் அம்மா, குளிக்க, மேல் கழுவ, அல்லது துணிகழுவ என்று குளியலறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டால் கதவடியில் நின்று சின்னது கதறிக் கதறி அழும். அழுகை இருமலில் போய் நிற்கும். அழுகையும் இருமலும் அடி வாங்குவதில் போய் நிற்கும். குழந்தை அடிவாங்கப் போவதைப் பொறுக்காத தாய் டக்கென்று கதவைத் திறக்க சின்னது ஊற்றாய் ஓடும் கண்களுடன் மெலிதாகச் சிரித்தபடி உள்ளே நுழைந்துகொள்ளும். நுழைந்த கையுடன் கதவை மூடி சொய் பரை எட்டிப் பிடித்து ஆட்டும். சொய்பர் ஆடும் அந்த ஒலி கதவு பூட்டப்பட்டு விட்டதற்கான அறிகுறி என எண்ணி குழந்தையின் மனம் குதூகலிக்கும்.

வெயிலும் மழையும் ஒன்றாய்த் தோன்றும் வானம்போல அழுகையும் சிரிப்புமாய் அழகொழுகும் முகத்தை ரசித்தபடி அந்தப் பிஞ்சு விரல்களை ஒதுக்கிவிட்டு அம்மாவின் கை சொய்பரைத் தள்ளிக் கதவைப் பூட்டிக்கொள்ளும்.

இதேபோலத்தான்... உள்ளே நுழைந்ததும் சொய்பரைப் பிடித்து ஆட்டியிருக்கிறது குழந்தை. அது எப்படியோ நீண்டு பூட்டிக்கொண்டது.

இப்போது குழந்தை உள்ளே! குளியலறைக்குள். தன்னந் தனியாக!

அம்மா, அம்மம்மா எல்லோரும் வெளியே! குளியலறைக் கதவருகே... கூட்டமாக பதறிக்கொண்டும், கைகளைப் பிசைந்து கொண்டும்... மெதுவாக கதவைத் தட்டிக்கொண்டும்...! குழந்தை யாகக் கதவைத் திறந்து கொள்ளாவிட்டால் வெளியே இருப்பவர்களால் ஒன்றும் செய்ய முடியாது.

கதவை உடைப்பதென்பது உடனடி சாத்தியமான காரிய மில்லை.

லேசாக உடைப்பதற்கு ஏதுவாகவா கதவுகள் அமைக்கப் படுகின்றன.

'பேபி... கதவத் திறங்கம்மா... பூட்டின மாதிரியே மத்தப் பக்கம் கொண்டியைத் தள்ளுங்கம்மா..."

'கதவு கிட்டவே நில்லுங்கம்மா... உள்ளுக்குப் போகாதீங்க... வழுக்கும்...'

வெளியே இருந்து பல விதமான குரல்கள்... பலவிதமான கோரிக்கைகள்.

வெளியில் இருந்து கேட்கும் குரல்களுக்குப் பதில் குரலாகக் கேட்பது அடிக்கொரு தடவை சொய்பர் ஆட்டப்படும் ஒலியும் கூடவே மமி... மமி... என்னும் குழந்தையின் கம்மிய குரலும் மட்டுமே...

உள்ளே நுழைந்து கதவைப் பூட்டிக்கொண்டபோது இருந்த குதூகலம் குழந்தையிடம் இப்போது மறைந்துவிட்டது.

தனக்குப் பிரியமானவர்கள் எவருடைய முகமும் தெரிய வில்லை. ஏதோ ஒரு பாதாள உலகத்திற்குள் தள்ளப்பட்டு, தனியாக மாட்டிக்கொண்டது போன்றதொரு பயம் தோன்று கின்றது! ஒருவருமே அருகில் இல்லை என்கின்ற தனிமை உணர்வு மேலெழுகின்றது.

அம்மாவின், அப்பாவின், அம்மம்மாவின், பெரியப்பா பெரியம்மாவின், சாந்தியின் முகங்கள் குழந்தையின் மனமுகத்தில் வந்து வந்து போகின்றன.

தூரத்தில் இருக்கும் அப்பம்மா, அத்தை, அத்தானின் முகங்களும் புன்முறுவல் அலைகளுடன் வருகின்றன!

'தாத்தாக் கண்ணேக் காணவில்லையே' என்னும் ஏக்கமும் கூடவே வருகின்றது. காணவில்லை என்பது குரல் கேட்க வில்லையே என்னும் ஆதங்கம்.

தாத்தாவைக் குழந்தை 'தாத்தாக் கண்ணே' என்றுதான் அழைக்கும். தாத்தாவும் குழந்தையை எத்தனை எத்தனையோ செல்லப்பெயர் சூட்டி அழைத்தாலும் கூடவே ஒரு கண்ணேயை யும் சேர்த்துக்கொள்வார். குஞ்சுக் கண்ணே! பூக்கண்ணே! சில்வியாக்கண்ணே... இப்படி! அதன் எதிரொலிதான் இந்த தாத்தாக்கண்ணே!

மம்மியும் மிம்மியும் மற்றையோரும் எத்தனையோ தடவை கிறான்பா (Granpa) என்று அழைக்கும்படி அழுதழுது பார்த்து விட்டாலும் சின்னதன் மழலை வாய்க்குள் Granpa நுழைவதே யில்லை. தாத்தாவும் நுழைய விடுவதில்லை.

தாத்தா என்பதில் தொனிக்கும் அந்த பாரம்பரிய ஜீவன் Granpaவில் ஏனோ இருப்பதில்லை. மனைவி, மக்கள், மக்களின் மக்கள், என்று தொடர்ந்து வரும் குடும்ப உறவின் பிணைப்பு...

வயதின் முதிர்ச்சியை நினைவுபடுத்தும் அதன் பண்பு...

குடும்ப நண்பரான டொக்டர் ஒரு தடவை, தாத்தா கதிரையில் இருந்து எழுந்த வேகத்தைப் பார்த்துக் கூறியுள்ளார். ஒரு இளைஞனைப் போல நடந்துகொள்வதைத் தவிர்த்து 'யூ மஸ்ட் ரெஸ்ட்பெக்ட் யுவர் ஏஜ்' என்று.

வயதைக் கனம் பண்ணும் பண்பு 'இந்த தாத்தா'வுக்கே இருக்கிறது.

பாடசாலை சுற்றுலா செல்லும் பேத்தியிடம் 'கருத்தடை வில்லை எடுத்துக்கொண்டாயா கண்ணே' என்று கேட்கும் மேலைநாட்டுக் கிறான்பாவிடம் இருப்பதில்லை. நிறைய ஆங்கிலப் படங்கள் இப்படியான கிறான்பாக்களையே காட்டுகின்றன.

தன்னுடைய முழு உலகமேயான, தன்மீது அன்பையும் பாசத்தையும் பொழியும் இந்த அனைவரிலும் ஒருவர் கூடத் தன் அருகே இல்லை என்னும் தனிமை உணர்வு அப்பிஞ்சுக் குழந்தையின் முன் பூதாகரமாக எழுந்து நின்றது.

தாத்தா தன்னுடைய படிப்பறையில் பைபிள் படித்துக் கொண்டிருந்தார்.

'ஏசு பேசிக் கொண்டிருக்கின்றார். சீடர்கள் அருகில் இருக் கின்றனர். மக்கள் தங்கள் சந்தேகங்களைக் கேட்க வந்திருந்தனர்.

'நீங்கள் கூறும் மோட்ச ராஜ்ஜியத்தில், பேரின்ப வீட்டில் யாருக்கு அதிக மகிமை' என்று அவர்கள் கேட்டனர்.

ஏசு ஒரு குழந்தையைத் தூக்கி மார்புடன் அணைத்துக் கொண்டார்.

'உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகின்றேன்.... நீங்கள் குழந்தைகள் போல் இருக்க வேண்டும். இல்லை என்றால் மோட்ச ராஜ்ஜியத்தில் உங்களுக்கு இடம் கிடையாது... குழந்தை யைப் போற்றுகிறவன் என்னைப் போற்றுபவனாகிறான்...'

வீட்டைச் சுற்றி குழந்தை, குழந்தை என்னும் குரல்கள் கேட்கின்றன. எழுந்து வெளியே வந்தவர் நிலைமைகளை உணர்ந்துகொண்டார்.

'குஞ்சுக் கண்ணே அப்படியே நில்லுங்கள்... தாத்தா உங்களிடம் வருகின்றேன்..." என்று குரல் கொடுத்தார்.

குழந்தைக்குத் திடீரென ஒரு குதூகலம். யாரோ ஒருவர் தன்னிடம் வரப் போகின்றார். இந்தத் தனிமை ஓடி விடும்...

அவர் என்னைத் தூக்கிக்கொண்டுபோய் மம்மியிடம் கொடுத்து விடுவார்...

வீட்டைச் சுற்றி ஓராள் உயரத்திற்கு ஒரு மதில் இருக்கிறது.

சுற்று மதிலுக்கும் வீட்டுச் சுவருக்கும் இடையில் உள்ள இடம் நாய் பூனைகள் ஓட மட்டுமே போதுமானது. மனிதர்கள் அதற்குள் நுழைந்து நடக்க வேண்டுமாயின் கின்னஸ் புத்தகத்தில் இடம் பிடிக்க டேவிட் பிளேய்ன் என்னும் அமெரிக்கன் லண்டனில் உண்ணாவிரதம் இருந்தது போல் 40 நாள் இருந்து உடல் மெலிய வேண்டும். இப்போது குழந்தை சிக்குண்டிருக்கும் குளியலறைக்கும் ஓராள் உயரத்துக்கு மேலாக ஒரு ஜன்னல் இருக்கிறது. கைகூட நுழைய முடியாத அளவுக்கு இரும்பு க்றில் பூட்டப்பட்டுள்ள ஜன்னல் அது. எப்போதும் திறந்தேதான் இருக்கும். வீட்டின் சுற்று மதிலின் உயரத்துக்கும் கம்மியான உயரத்திலேயே ஜன்னல் இருப்பதால் அதை மூடிவைக்கும் தேவை ஏற்படுவதில்லை.

சமையலறைக் கதவு வழியாக வெளியே வந்து, பூனைகள் மட்டுமே மகிழ்வுடன் உலாவும் அந்தச் சின்ன சந்துக்குள் நுழைந்து முதுகைச் சுவர்ப்பக்கம் வைத்து பக்கவாட்டில் நகர்ந்து வீட்டைச் சுற்றி மறுமுனைக்கு வந்தால் குளியலறை ஜன்னலடியில் நிற்போம்.

வந்தாயிற்று! திறந்த ஜன்னலின் அடிப்பக்கம் உச்சந் தலையை உரசிக்கொண்டிருக்கிறது. எதையாவது வைத்து ஏறினால்தான் ஜன்னலால் உள்ளே பார்க்க முடியும்.

ஆளே நுழைய முடியாத சந்துக்குள் எதைக் கொண்டு வந்து வைத்து ஏறுவது!

ஆளே நுழைய முடியாதென்றால் எதற்காக இந்தச் சந்து என்று யாரும் கேட்கலாம். அது வீட்டுக்காரரைக் கேட்க வேண்டிய கேள்வி.

நாங்கள் வெறும் வாடகைக்காரர்கள் மட்டுமே!

பின் சுவரில் ஒரு காலும் வீட்டுச் சுவரில் ஒரு காலுமாக ஊன்றி உந்தி உந்தி ஏறி தலையை ஜன்னல் வரை உயர்த்தியாகி விட்டது.

பூட்டப்பட்டுவிட்ட கதவில் முதுகைச் சாய்த்தபடி சோர்ந்து போய் நிற்கிறது சிசு.

கதவின் மண்வர்ணப் பின்னணியில் ஒரு லில்லி மலர் போல.

மெதுமெதுவாக உயர்ந்த தாத்தாவின் முகம் ஜன்னலில் தெரிந்தவுடன் சோர்வுற்றுப் போயிருந்த அந்த சின்ன வதனத்தில் ஏற்பட்ட மகிழ்வைப் பார்க்க வேண்டுமே!

இதோ கைக்கெட்டும் தூரத்தில் எனக்கொரு துணை என்ற துணிவு! அதனால் ஏற்பட்ட மகிழ்வு. அந்த மகிழ்வில் முகிழ்ந்த லாவண்யம். கதவின் சாய்விலிருந்து அசைந்து அசைந்து முன்னேறுகிறது குழந்தையின் முகம். திரைத்துணியில் அசைந் தாடும் ஓவியம் போல்!

இப்படியேதான் இரண்டுக்கு ஒன்றரை அடிப் படம் ஒன்று இருக்கிறது முன் ஹாலில். இதே பூஞ்சிரிப்புப் பார்வையுடன்.

இரண்டாவது பிறந்த தின நினைவுக்காக கோவிலுக்குப் போய் வீட்டுக்குத் திரும்புகையில் அம்மாவும் அப்பாவும் ஸ்டூடியோவுக்குப் போய் ஒரு நெஞ்சளவு போஸ்கார்ட் சைஸ் படம் ஒன்று எடுத்துள்ளார்கள் குழந்தையை மட்டும்.

படத்தை வாங்கச் சென்றபோது "டெறிப்லி போட்டோ ஜினிக் லிட்டில் ப்ளவர்" என்னும் கொமெண்டுடன் படத்தைக் கொடுத்துள்ளார் ஸ்டூடியோக்காரர்.

பிறகொரு நாள் எதற்காகவோ அந்த ஸ்டூடியோவுக்குப் போனபோது திகைத்துப் போய் விட்டனர் பெற்றோர். குழந்தை யின் படம் பெரிய அளவில் ஸ்டூடியோ விளம்பரத்துடன் அழகாக கண்ணாடி பிரேமுக்குள்.

'எங்கள் குழந்தையை எங்கள் அனுமதி இன்றி எப்படி விளம்பரத்துக்குப் பாவிக்கலாம்' என்று ஸ்டூடியோகாரருடன் சண்டை பிடித்துள்ளார்கள். 'வழக்குப் போடுவோம்' என்று கொதித்துள்ளார்கள். பிறகு ஒரு விதமாகச் சமாதானம் கொண்டு விளம்பரத்தை வெட்டி அப்புறப்படுத்திவிட்டு பெரிய அளவிலான படத்தை வாங்கிக்கொண்டு வந்து ஹாலில் மாட்டிக் கொண்டார்கள்.

கதவில் சாய்ந்தபடி சோகமும், சோகம் மறைந்த ஒரு ஒய்யாரமுமாக... இதோ நிற்கிறதே இதே போலத்தான்.

'தாத்தாக் கண்ணே' என்று பலமாகக் கூவியபடி ஜன்னலை நோக்கி விரைய யத்தனித்தது குழந்தை.

'வரவேண்டாம் கண்ணே, அங்கேயே இருங்கள். கதவுப் பக்கம் திரும்பி கொண்டியைக் காட்டுங்கள்....' என்கின்றார் தாத்தா.

சரியாக சொய்பரின் உருண்டைத் தலையைப் பிடித்துக் காட்டுகிறது குழந்தை.

சொய்பரின் கீழ் இடைவெளிக்குள் விழுந்து கிடக்கிறது இந்தக் குமிழ்.

அதைப் பிடித்துத்தான் குழந்தை ஆட்டுகிறது. ஒலி எழும்புகிறதே தவிர முன், பின்னாக அது ஓட மறுக்கிறது.

'அதுதான் அதேதான்' உற்சாகமாகக் கூறுகின்றார் தாத்தா. 'அதை நேராக்குங்கள் செல்லம்' என்கின்றார்.

குழந்தை அதை நேராக்குகிறது. மேல் இடைவெளிக்குள் அது விழுந்துவிட்டால் மறுபடியும் இப்பக்கம், அப்பக்கம் ஓடாது.

ஆகவே குழந்தையின் விரலசைவுகளையே உன்னிதமாகக் கவனித்துக்கொண்டிருந்த தாத்தா குமிழைக் குழந்தை நேராக உயர்த்தியதும் இப்போது தள்ளுங்கள் என்றார்.

பூட்டுகிற பக்கம் தள்ளிப் பார்த்து ஏமாறுகிறது குழந்தை. அந்தப் பக்கம் இல்லை மற்றப் பக்கம் என்று தாத்தா கூறி முடிக்கும்முன் சின்ன விரல்கள் இயங்கின.

கிளிக் என்னும் ஒலியுடன் கொண்டி விலகியது. கதவு திறந்துகொண்டது.

தேவனைத் தொழ வான் நோக்கி உயரும் பக்தர்களின் கரங்கள் போல் எத்தனை கரங்கள் நீளுகின்றன.

வெளியே ஓடிவந்த குழந்தை அம்மாவின் கரங்களுக்குள் அடைக்கலமாகிறது.

இனியொரு தடவை இப்படி நேராமல் இருக்க என்ன செய்யலாம்... வெளியிலிருக்கும் கொக்கியை குழந்தைக்கு எட்டாத உயரத்தில் அடித்துக்கொள்ளலாமா' என்பது போன்ற சிந்தனைகளில் மூளையைக் குழப்பிக்கொண்டனர் கூடி நின்ற பெரியவர்கள்.

'இன்னொரு தடவை இப்படி நடந்துவிட்டால் இதேபோல் திறந்துகொள்வேன்' என்ற தெளிவான சிந்தனையுடன் குழந்தையின் பிஞ்சுக் கைகள் அம்மாவின் கழுத்தை இறுக்கிக் கொண்டன. கண்களின் ஓரம் தாத்தாவைத் தேடுகிறது.

★

# அம்மா

இன்னும் இரண்டொரு சூரியன் இருந்தால்தான் கட்டுபடியாகும் என்று பட்டது அவனுக்கு.

எலும்பைக் குடையும் நுவரெலியா குளிருக்கு, இந்த ஒரு சூரியன் போதாதுதான். டார்வினின் நண்பரும் விஞ்ஞானியும் தத்துவஞானியுமான ஏர்னஸ்ட் ஹெகல் என்பார், உளச் சோர்வோ, உடற்சோர்வோ உள்ளவர்களுக்கு இது ஒரு மெக்கா என்று வர்ணித்த அதே நுவரெலியாதான்.

இவனுக்கு இரண்டு சோர்வுமே சேர்ந்தாற்போல் வந்திருக் கின்றன. நிற்க முடியவில்லை! வெடவெடக்கிறது. நடக்க முடிய வில்லை! நடுங்குகிறது. உட்கார முடியவில்லை! ஊசியாய் குத்துகிறது!...... இப்படியும் ஒரு குளிரா! இப்படியும் ஒரு ஊரா!

காற்றின் குளிர், மயிர்க்கால்கள் ஊடாகத் தோலுக்குள் நுழைந்து, தசைகளுக்குள் வியாபித்து, ஒவ்வொன்று ஒவ்வொன்றாய் எலும்புகளைத் தேடித்தேடி எண்ணிச் சுற்றிச் சுற்றி..... உடல் ஜில்லிட்டு விறைத்துப் போகிறது.

இதே மாதத்தில் மூன்றாவது தடவை இது.

அம்மாவைப் பார்க்கப் போக வேண்டும் என்னும் பேச் செழுந்தபோதே லயத்துக்கு வரமாட்டோம் என்று மக்கர் பண்ணினார்கள் மனைவியும் மகளும். அவனுக்கும் நியாய மாகவேதான் பட்டது.

நுவரெலியாவிலிருந்து பதினெட்டு இருபது மைல் தொலை விலுள்ள அந்தத் தேயிலைத் தோட்டத்துக்கு, வாடகைக்கு ஒரு கார் பிடித்துக்கொண்டுதான் போக வேண்டும். பஸ்ஸிலும் போகலாம்தான். ஆனால், நுவரெலியா பஸ் ஸ்டாண்டில் பஸ் ஏறுவதென்பது ஒரு சர்க்கஸ் விளையாட்டு மாதிரி. ஸ்டாண்டை நோக்கி ஓடிவரும்போதே பஸ்ஸில் ஏறும் சாகஸம் தெரிந்திருக்க வேண்டும். அடித்துப் பிடித்து முட்டி மோதிக்கொண்டு ஏறத் தைரியம் வேண்டும். விழாமல், கால் செருப்பை அறுத்துக் கொள்ளாமல் பாய்ந்து தொற்றிக்கொள்ளும் லாவகம் தெரிய வேண்டும். குடையைக் கண்டதும் மிரளும் பசுமாடுபோல் கூட்டத்தைக் கண்டாலே மிரளும் இதுகளுடன் எப்படி பஸ் ஏறுவான்?

ஆகவே அம்மாவைப் பார்க்கத்தானே என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு, வாடகைக் கார்தான், இங்கிருந்து ஐம்பது ரூபாயில் முடியும் பயணம் இன்னொரு சைபரைச் சேர்த்துக்கொள்ளும்.

நுவரெலியா டவுனில் அவன் நண்பர் தாயுமானவர் லாயராக இருக்கிறார். அவருடைய வீட்டில் மனைவியையும் மகளையும் நிறுத்திவிட்டு தான் மட்டும் தோட்டத்துக்குச் சென்று வருவதாக ஏற்பாடு.

இந்தமுறை அம்மா ஏமாற்றமாட்டார்கள் என்றே எண்ணிக் கொண்டான்.

"அங்கே இருந்து நீங்கள் மட்டும் தனியாக அம்மாவைப் பார்க்கப் போவதென்றால் இங்கிருந்தே தனியாகப் போய் வாருங் களேன்.! நாங்கள் வீட்டில் இருக்கிறோம் என்றாள் மனைவி. அவன்தான் சம்மதிக்கவில்லை. ஒருவேளை அம்மா செத்துப் போய்விட்டால் மறுபடி கொழும்பு வந்தல்லவா கூட்டிப் போக வேண்டும் என்று மனைவியைச் சமாதானம் செய்தான். அவள்தான் பிடிவாதமாகத் தோட்டத்துக்கே வருவதென்றாள், இவ்வளவு தூரம் வந்துவிட்டு இங்கே என்ன தங்குவது என்று.

கார் பிடித்துக்கொண்டே போனாலும் மேலே கோவிலடி யில் நிறுத்திவிட வேண்டும். கோவிலை ஒட்டிக் காடாய் மண்டிக் கிடக்கும் மல்லிகைப் புதர். கரும்பச்சை வானத்தில் நட்சத்திரங்

களை வாரி இறைத்தாற்போல் புதர் நிறைய வெள்ளை வெள்ளையாய் வெடித்துச் சிரிக்கும் மலர்கள். கண் மட்டுமல்ல மனமும் கொள்ளாக் காட்சிதான்! இல்லை என்று கூற வில்லை!... மல்லிகைப் புதரை ஒட்டினாற்போல் கொழுந்து நிறுக்கும் மடுவம். மடுவத்தின் ஓரமாக வந்து நின்று கிணற்றுக் குள் எட்டிப் பார்ப்பதுபோல் கீழே பார்த்தால் மலையடிவாரத் தின் பள்ளத்துக்குள் தெரியும் ஏழெட்டுப் பத்து லயத்துக் கூரைகள் சிவப்புச் சிவப்பாய் கோடாகப் புகைவிட்டுக் கொண்டு.

அதில் ஒன்றின் ஓரத்துக் காம்பிராதான் அம்மாவின் வாசஸ்தலம். அம்மாவும் தம்பியின் குடும்பமும் அதற்குள்தான்.

வெள்ளைக்காரன் தேயிலை பயிரிடத் தொடங்கிய காலத் தில் கட்டப்பட்டவை இந்த லயங்கள். நூற்றைம்பது அறுபது ஆண்டு பழைமை வாய்ந்தவை. மாற்றமே இல்லாமல் அப்படியே தொடர்கின்றன. அரசுக்கு அரசு தலைவர்கள் மாறுகிறார்கள். ஆனாலும் இவை மாறுவதில்லை!

கொழுந்து மடுவத்துக்கு இந்தப் பக்கமாக இரண்டு தேயிலைச் செடிகளின் இடைவெளிக்குள் ஒரு குறுக்குப்பாதை இறங்குகிறது. படிகள் கட்டப்பட்டுக் கல் பெயர்ந்து, பல் விழுந்து எகிறுபோல்.....

அதன் வழியாகக் கீழே இறங்க வேண்டும். நின்று நெளிந்து ஒடிந்து திரும்பி இருநூற்றி இருபது படிகள் இறங்கிவிட்டால் அம்மா இருக்கும் லயம் வந்துவிடும்.

அது எப்படி அவ்வளவு கரைக்டாக இருநூற்றி இருபது படி என்று கேட்கத் தோன்றுகிறதா? பள்ளி நாட்களில் தினசரி இரண்டு தடவை ஏறி இறங்கிய படிக்கட்டாயிற்றே! இறங்கி ஓடும்போது முதல் நாலைந்து படிகளை விட்டு விட்டு எண்ணத் தொடங்கினாலோ அல்லது கடைசி நாலைந்து படிகள் வரும் போது எண்ணுவதை எதேச்சையாக விட்டுவிட்டாலோ, கல்லுக்கு கல் கால் வைத்து ஓடும்போது எண்ணி எண்ணி ஓடிய படிகள்தான். பழக்கம்தான். இருநூற்றி இருபதுக்குக் கூடுமே தவிர குறையாது.

சப்பாத்தின் உயர்குதி கல்லிடையில் சிக்கிக் கால்புரண்டு சுளுக்கிக்கொண்ட அனுபவங்களால் கழற்றிக் கையில் தூக்கிக் கொண்டு மனைவியும் மகளும் அவன் பின்னால் இறங்கு வார்கள்.

அவர்களின் முகத்தைப் பார்த்துக் கண்களைச் சந்திக்கும் தைரியம் அப்போது அவனிக்கிருப்பதில்லை.

கோவிலடியில் கார் நிற்கும்போதே கீழே லயத்தில் பக்கத்துக் காம்பிராக் காமாட்சி, "பெரியதம்பி வாறாப்பல இருக் கேம்மா?..." என்று விசாரிக்கத் தொடங்கியிருக்கும்.

வாசல்வரை வந்து பூவரச மரத்தடியில் அம்மா நிற்பார்கள். தம்பியின் பிள்ளைகள் பின்னால் நிற்கும். தம்பி பட்டியில் இருப்பான். ஏதாவது மண்ணை நோண்டிக்கொண்டு.

"பாத்து, பாத்துப்பா!... பாத மாதிரியா இருக்கு?... அட மழயில மண்ணல்லாம் அரிச்சுக்கிட்டுப் போயிறுச்சி!... பொந்துக்குள்ளாற ஏதுங் கால விட்டுக்குறாம!..." என்று குரல் கொடுத்தபடி இரு கைகளையும் நீட்டிக்கொண்டு அவர்களை வரவேற்கும் அம்மா..

வயதால் பாதியும் குளிரால் மீதியுமாகச் சுருங்கித் தொங்கும் தோல்களுடன் அந்த முகம், அந்தக் கைகள்!......

அள்ளி அணைத்துக்கொள்ளும் அந்தக் கைகளின் சிலிர்ப்பு இவனுடலுடன் இழைய, அப்படியே அலாக்காக அம்மாவைத் தூக்கி ஒரு சுற்றுச் சுற்றி உள்ளே நுழைந்துவிடுவான்.

பின்னால் நிற்கும் சின்னதுகள் பேந்தப் பேந்த முழிக்கும்.

"விடுப்பா விடு!... நான் புள்ளையக் கொஞ்சணும்!" என்று தன்னை விடுவித்துக்கொண்டு வெளியே திரும்புகையில் மருமகளும் கொழும்புப் பேத்தியும் லயத்துக்குள் நுழைவார்கள்.

மருமகளின் நெற்றியில் கையை வைத்துக் கன்னம் வழி தாவாய் வரை உருவி நெற்றிப் பொட்டில் விரல்களை நெரித்துப் படபடவென்று முறித்துக்கொண்டு, "பாத்தியா எவ்வளவு திருஷ்டி என் செல்லத்துக்கு!" என்றபடி துணிகளை இழுத்துக் கொடியில் போட்டுவிட்டு நாற்காலியை இழுத்துப் போட்டு "இரும்மா!" என்பார்கள். கொழும்புப் பேத்தியின் ஆப்பிள் கன்னங்களைத் தனது கைக்குள் அடக்கி அப்படியே இழுத்து நெஞ்சோடு அணைத்துக்கொள்வார்கள். பேத்தி, 'ஹய்ய்' என்று கத்துவாள். "பாட்டி கை குளிருதாம்மா?" என்பார்கள். சிரித்தபடி "குத்துது!' என்பாள் பேத்தி.

அவனும் மகளும் கட்டிலில் அமர்ந்துகொள்வார்கள். அம்மா இருவருக்கும் நடுவில் படத்துக்கு அமர்வதுபோல் அமர்ந்துகொள்வார்கள்.

தம்பியின் மனைவி ஆவி பறக்கப் பறக்கத் தேநீர் கிளாஸ் களுடன் வந்து நிற்பாள்.

"தேத்தண்ணி குடிப்பியாம்மா?" என்று தேநீர்' கிளாஸை எடுத்து நீட்டுவார் அம்மா பேத்தியிடம்.

"ம்!" என்றபடி கிளாஸை வாங்கிக்கொள்வாள் பேத்தி. 'காலையில் தேத்தண்ணி குடிக்க மாட்டோம். கோப்பிதான்' என்பது போன்ற பாட்டிக்கு அசௌகரியம் ஏற்படுத்தும் பேச்சுகள் கூடாது என்று சின்னவளுக்குச் சொல்லிக் கொடுத்து வைத்திருக்கிறான். எது எது என்பதெல்லாம் அந்தச் சிறிசுக்கு எப்படித் தெரியும்? ஆகவே எல்லாவற்றிற்கும் 'ம்' தான்!

"அம்மா, டீ!" என்றவாறு அம்மாவிடம் மகள் எழுந்து செல்வதன் அர்த்தம், 'எனக்கு டீ வேணாம்! என்பதுதான்! "ட்றிங் லிட்டில்! வெரி கோல்ட், நோ?" என்றபடி கிளாஸை வாங்கி மகளுக்குப் பருக்கத் தொடங்குவாள் தாய்.

"நீ குடிம்மா! நான் குடுக்கிறேன் பாப்பாவுக்கு!" என்றவாறு அம்மா கட்டிலை விட்டிறங்குவார்கள்.

"எல்லாம் ஆயும் மகளும் பாத்துக்கிறுங்க! நீங்க இருங்க!" என்று, தான் பாதி குடித்த கிளாஸை அம்மாவின் வாயில் வைத்து மெதுமெதுவாகச் சாய்ப்பான் அவன்.

"நீ குடிப்பா!" என்றாலும் அம்மாவின் தொண்டைக்குள் அது ஜீவாம்ருதமாய் இறங்கும். கண்கள் படபடத்துக் கசியும் புருவத்துக்கும் தெரியாமல்.

வேரும் மண்ணுமாய்; நாலைந்து நோக்கல் கிழங்குடன் வந்து நிற்பான் தம்பி.

தோட்டத்தில் அவனுக்கு சூப்பர்வைஸர் வேலை கொடுத் திருக்கின்றார் துரை! ஒரு வருசம்போல் ஆகிறது. அரைக்கால் சட்டை, சப்பாத்து, மேஸ் போட்டு, அதுவரை கையில் கத்தியும் தோளில் மண்வெட்டியும்தான். அவன் மனைவி தோட்டத்தில் வேலை. பழைய மலையோ மட்டக் கொழுந்தோ கொழுந்து தான்.

கட்டைவிரல் நுனியும் ஆள்காட்டி விரலோரங்களும் வரியாய்த் தேயிலைக் காட்டையுடன் கறுப்புக் கறுப்பாய்க் கோடு பாய்ந்து கிடப்பதெல்லாம் கொழுந்தாய்வின் முத்திரைகள். பெரியண்ணன் சம்சாரம் வந்தால் அந்தப் பளிங்கு விரல்கள்தான் இவளை முதலில் கவர்வது. அக்காவின் மோதிரம்கூட அந்த விரலால்தான் பெருமை அடைவதாக எண்ணிக் கொள்வாள்!

நோக்கல் கிழங்கை வேருடன் பார்த்தே இராத மகளுக்கு ஒரே வியப்பு! கண் விரிய நிற்பாள்!

“வேர வெட்டி வீசுங்க! இல்லாட்டி மண்ண அலசிக்கிட்டு வாங்க!” என்று மனைவியும் “கோழியத் தொறந்து உட்றாதப்பா! கோணக்கொண்ட சேவல சுத்தம் பண்ணிக் குடுத்துறு! என்று அம்மாவும் அவனுக்கு உத்தரவிடுவார்கள்.

இருவருக்குமே தலையை ஆட்டிவிட்டு அண்ணனைப் பார்ப்பான் தம்பி.

“ராத் தங்கிட்டு நாளைக்குப் போங்களேன்? ஆள் நெருங்கி என்னா ஆயிறப் போவுது?... மனசிருந்தா எடமா இருக்காது!... கார்க்காரன நாளைக்கு வான்னு அனுப்பிட்டு வரவா?...” அண்ணன் குடும்பத்தை ஒரு இரவு தங்களுடன் தங்கவைத்துக் கொள்ளும் ஆசை அவன் முகத்தில் நர்த்தனம் ஆடும்.

அம்மாவுடன் தங்கி இரவைக் கழிக்க அவனுக்கும் ஆசைதான். ஆனாலும் இருக்கும் அந்த ஒரே காம்பிராவில் படுக்க, எழுந்திருக்க, காலையில் வெளியே தெருவே போக எங்கே வசதி இருக்கிறது?

லயத்தின் முன் லைசன் கல்லில் நின்றுதான் பல் துலக்கி முகம் கழுவ வேண்டும். முழு லயமுமே நின்று வேடிக்கை பார்க்கும். இல்லாவிட்டால் பட்டிப் பக்கம் போய்விட வேண்டும்...

முழு லயத்துக்குமே இருப்பது இரண்டே மலசல கூடங்கள். அதுவும் தேயிலைக்குள்ளே போக வேண்டும் கையில் செம்புடனோ கைவாளியுடனோ!

கொழும்பிலேயே பழகிவிட்ட மனைவி மக்களுடன் இதெல்லாம் பெரும் சிரமம். ஆகவேதான் மனதைக் கடித்துக் கொண்டு வந்த அன்றே கிளம்பிவிடுவான்!

தனியாக வந்தால் தங்கிவிட்டே செல்வான். அவன் புரண்டெழுந்த மண் அது!

ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருக்கும் தம்பியைப் பார்த்து ஒருவகை ஏமாற்றத்துடன் கூறுவான், “இல்ல ராசு கார்க்காரன நாலு மணிபோல வான்னு சொல்லி அனுப்பீட்டுத்தான் வந்தேன்” என்று.

“அம்மி அரைக்கிற சத்தங்கேக்குது, என்னா அரைபடுது?” என்பான்.

“நீ சும்மா இரேன்; கொச்சிக்கா அரைக்கிறா உன் கொழுந்தியா” என்று கூறியபடி அம்மா தேநீர் கிளாஸ்களை எடுத்துக்கொண்டு அடுப்படியை நோக்கி நடப்பார்கள்.

அந்த வயதிலும் அந்தக் குளிரிலும் அம்மா சிட்டைப்போல் பறப்பதாகத் தெரியும் அவனுக்கு. உழைத்து உரமேறிய உடல் சீக்கிற்கோ தளர்வுக்கோ அது இடமளிக்காது. அவனுடைய வருகையும் அவளுக்கு ஒரு புதுத் தெம்பைக் கொடுக்கிறது. உடலிலே ஒரு இளமை! நடையிலே ஒரு துள்ளல்!

தம்பி மனைவியைக் கொழுந்தியாள் என்றழைக்கும் உறவு முறையின் உரிமை, குழம்பாக்கக் கொச்சிக்காய் அரைபடும் அம்மிச் சத்தம் இத்தியாதிகளைக் கேட்க இங்கு வரவேண்டும்!

கொழும்பில் யார் அம்மியில் அரைக்கிறார்கள்? பொலித் தீன் பொட்டலங்கள்தானே!

“என்னாப்பா, அப்படியே உக்காந்துட்டா எப்படி?...” என்று மனைவியைக் கிளப்புவான். அவன் மகள் இன்னும் அம்மாவின் மடியிலிருந்து எழவில்லை!

கூரையில் செருகியிருக்கும் தீட்டுக்கட்டையும் கத்தியுமாகத் தம்பி தோட்டத்துக்குள் சென்றுவிடுவான். கோழி கறேபுறே என்று கூக்குரலிடும்.

மனைவியையும் மகளையும் கூட்டிக்கொண்டு அவனும் தோட்டத்துக்குள் செல்வான். தம்பியின் சின்னது இரண்டும் அக்காவின் கைகளை பிடித்துக்கொண்டு உடன் நடக்கும்.

அம்மாவின் மடியில் அவனும் அவன் மடியில் அம்மாவுமாய் ஆனந்தமாக அந்தக் கொஞ்ச நேரப் பொழுதைப் போக்கி விடுவான் அவன்.

ஆனால், மனைவியும் மகளும் எத்தனை நேரம் அதற்குள் ளேயே அமர்ந்திருப்பார்கள்?

லயத்துக்கும் காய்கறி தோட்டத்துக்கும் நடுவில் இருக்கும் வேலியிடம் நிற்கிறது ஒரு மாதுளை மரம். சின்னவனுக்கும் அதற்கும் ஒரு வயசு என்று இறக்கும்முன் அப்பா அடிக்கடி கூறுவதுண்டு.

கிளை நுனிகளில் சிவப்புச் சிவப்பாய் சின்னச் சின்னப் பூக்களும் குண்டு குண்டாய்க் காய்களுமாய்..

ஒரு காயைத் தொட்டுப் பார்க்கின்றாள் மகள். தனது மொட்டுகள் விரிய “மாதுளை” என்பாள் தகப்பனைப் பார்த்து.

“புடுங்கி திண்ணும்மா! குடற் பூச்சிக்கும் நெஞ்சுச் சளிக்கும் நல்லது” என்று உள்ளிருந்து ஓடி வருகிறது அம்மாவின் குரல்.

தங்களைச் சுற்றி சுற்றியே வலம் வரும் அம்மாவின் அன்புப் பார்வை அவனைத் தடுமாறச் செய்கிறது.

அம்மாவுக்கென்று அவன் என்ன செய்திருக்கின்றான்? படித்து பாஸாகி உத்தியோகம் தேடி காதலித்துக் கல்யாணம் கட்டிக் குழந்தை பெற்று...

என் மகன் இப்படி இப்படி இருக்கிறான் என்று கூறிக் கூறிப் பெருமைப்படும் நெஞ்சம் அது!

எனக்கு என்ன செய்தாய் என்று எதிர்பார்க்கும் நெஞ்சமல்ல. இப்படி ஒருநாள் வருவதுவும் “இனி எப்பப்பா?...” என்னும் கேள்வியுடன் விடை பெறுவதும்தான்; அவன் செய்வது!

இந்த வருகைதான் அந்தத் தாயுள்ளத்தை எப்படி ஆட் கொண்டுவிடுகிறது!

அம்மாவுக்கு ஏதாவது செய்யவேண்டும் என்னும் உறுத்தலில் ஒரு தடவை கொழும்புக்குக் கூட்டிக்கொண்டு போனான் தன்னுடன் வைத்துக்கொள்ள!

இந்தக் குளிருக்கும் கொழும்பின் சூட்டிற்கும் அம்மா திண்டாடிப் போனார்கள். பட்டியில்லை, மாடில்லை, சுற்றிவரத் தோட்டமில்லை, பிடுங்கிச் சமைக்கக் காய்கறியில்லை! அம்மா வுக்கு ஒரு நாள் போவது ஒரு மாதம் போல் தெரிகிறது.

மகன் வீட்டில் மாட்டிறைச்சி ஆக்குகின்றார்கள்! கொழும் பில் இதெல்லாம் சகஜம்; சாதாரணம். ஆனால், அம்மாவுக்கு...

“...எனக்கு... தனியா...” என்றார்கள் மகனிடம் ஒரு நாள்.

“உங்களுக்கு அதெல்லாம் இல்லே தனியாத்தான்” என்று தொடங்கிய மகனிடம் மெதுவாகக் கூறினார்கள்: “தனியா ஒரு கோப்பயும் ஆப்பயும்பா!... நீங்க பாவிக்ற ஆப்ப, கரண்டி எல்லாம்... வாணாம்”

மருமகளிடம் அம்மா மூச்சு விடமாட்டார்கள். ‘வாம்மா, இரும்மா’ என்றுகூடச் சொல்லமாட்டார்கள்: ‘வாங்க, இருங்க’ தான். மருமகள் அம்மாவுக்கு ஒரு மகாராணி மாதிரி! என் மகனை நம்பி வந்தவளாயிற்றே என்னும் நினைவு.

பல்லைக் கடித்துக்கொண்டு ஒரு பத்து நாள் இருப்பார்கள் அவ்வளவுதான்!

தான் பிள்ளைகளுக்குச் செய்யவேண்டும் என்பதைத் தவிரப் பிள்ளைகள் தனக்குச் செய்யவேண்டும் என்னும் எதிர்பார்ப்பு இல்லாதவள் தாய்.

நம்மைச் சுற்றி ஆயிரம்பேர் இருக்கலாம். அன்பைச் சொரிய லாம். ஆனால், யாருமே அம்மாவாக ஆகிவிட முடியாது!

அம்மா அம்மாதான்!

மாதுளை மரத்தைத் தாண்டிப் பட்டியில் மாடுகளிடம் நின்று பயந்து பயந்து தொடும் மனைவி, மகளைக் கேலியாகப் பார்த்துப் பசுவின் மடியில் கை வைத்துக் காம்பை இழுத்துப் பாலைப் பீய்ச்சிக்காட்டிப் பெருமைப்பட்டுக்கொண்டு கீழே நடப்பான், அவன்.

மடியில் கை பட்டதும் பசு சிலிர்த்துக்கொள்வதை வேடிக்கை பார்த்து நிற்கும் மகள், உடலைக் கூனி வாலை உயர்த்தி அது தடதடவென்று பெய்ய ஆரம்பித்தது தெறிக்க ஆரம்பித்ததும் காலைத் துடைத்தபடி ஓடி வந்துவிடுவாள்!

பட்டிக்குக் கீழே ஒரு நீரோடை. தண்ணீர்க் கான் அருகே தம்பி ராசு கோழி வெட்டிக்கொண்டிருப்பான். அவன் தலைக்கு மேலாகப் பலாமரத்தில் முற்றாத காய்களின்மேல் தாவித்தாவிப் பாய்ந்து, பழுத்திருக்கிறதா என்று வாசனை பிடிக்கிறது அணிற் கூட்டம்.

“அணில் பழம் தேடுது, பாத்தியா” என்று மகளுக்குக் காட்டுவான்.

தம்பி கோழி வெட்டும் லாவகத்தை ரசித்துக்கொண்டு நிற்பாள் மனைவி.

ஏதோ வாசம் மூக்கைத் துளைக்கிறது. நுனி மூக்கு விரிந்து வாசனை காற்றை மாற்றிக்கொள்கிறது.

“அன்னாசி ஒண்ணு பழுத்திரிச்சி. கொஞ்சம் இலை சருகெல்லாம் போட்டு மூடித்தான் வச்சேன்! காக்கா சனியனுக உடுமா! கொத்தியிருக்கும்: அதுதான் கமகமக்குது!........” என்று கோழியை அப்படியே வைத்துவிட்டுத் தம்பி எழுந்து போய் அன்னாசிப் பழத்தை ஒடித்து எடுத்து வந்து நீட்டுவான்.

மகள் வாங்கிக்கொள்வாள். கொண்டைக்குக் கீழே லேசாகக் கொத்தியிருக்கிறது காகம். வாசனை தாங்கமுடிய வில்லை.

"வெட்டித் தர்றேன் பெறகு" என்றபடி கோழி வெட்டுவதில் குந்திக்கொள்வான் தம்பி.

நீரோடையின் இருமருங்கிலும் கரும்பு செழித்து நிற்கிறது. கரும்போலையின் அடிப்பக்கம் கறுப்புக் கறுப்பாய் ஆடியாடி அமர்ந்திருக்கும் அழகான சின்னச் சின்ன பூச்சிகள் இலை ஆடியதும் பறந்து மறுபடியும் அதேபோல் கூட்டமாக அமரும் காட்சி கண் கொள்ளாதது.

மனைவிக்கும் மகளுக்கும் கரும்பை ஆட்டி ஆட்டிக் காட்டிக்கொண்டிருப்பான் அவன். பூச்சிகள் எழுந்து பறப்பதையும் மீண்டும் அமர்வதையும் கண்டு ரசிக்க.

இப்படி ஒவ்வொன்றையும் வியப்புறும் வண்ணம் காட்டி அவர்களின் ஆயாசத்தை, தனிமையை, இட வித்தியாசத்தை விரட்டிப் பொழுதைக் கழித்துவிடும் எண்ணம் அவனுடையது.

"அண்ணிக்கும் மகளுக்கும் வேடிக்க காட்டுறியா, கோழி வேல நடக்குதா? அரக்கப் பறக்க அள்ளிப்போட்டுக்கிட்டு அனுப்பத்தான் வேண்டி வரும்! சுருக்காக் கொண்டாந்து குடு" என்று இளைய மகனை எச்சரித்த அம்மாவின் குரல், "கரும்போலயத் தடவிப் பார்க்க வேணாம்னு அம்மாகிட்ட சொல்லும்மா. வெட்டுறது தெரியாம வெட்டிப்புடும் வெரல..." என்று பேத்திக்கும் எச்சரிக்கை விடுக்கிறது.

கரும்பிடமிருந்து விலகி நின்றுகொள்வாள் மருமகள்!

"அதே பஞ்சு மாதிரி வெரல்! அறுத்தாலும் ஆழமாத்தான் அறுத்துப்புடும்" என்று ஒத்தூதும் தம்பி மனைவியின் குரல்.

அம்மா நீரோடை அருகே வந்துவிடுவார்கள். "இதறுதி பாத்தது போதும், இனிப் பெறகு பாக்கலாம், வாங்க தேத்தண்ணி குடிக்க!....."

"இப்பத்தானே குடிச்சோம்?"

"அது வெறுந் தேத்தண்ணிதானே, காலையாகாரம் ஏதுஞ் சாப்புடுறதில்லியா! சுடச்சுட உப்புமா கௌறியிருக்கேன். ஆறிப் போயிறும், வாங்க" என்று மருமகளையும் பேத்தியையும் அழைப்பாள். பேத்தியிடமிருந்து வாங்கும் அன்னாசிப் பழத்தைக் கீழே வைப்பாள் " பச்சப் புள்ள கையில் இதத் தூக்கிக் குடுத்தா எம்மா நேரம் வச்சிருக்கும்!" என்றபடி.

"நீ வல்லையா சாப்புட?" என்று தம்பியைக் கேட்பான் அவன்.

"இதோ முடிஞ்சிறிச்சி. நீங்க நடங்க நான் வந்துடுறேன்" என்பான் தம்பி.

எட்டி நாலைந்து வாழை இலை நுனிகளை நறுக்கிக் கொள்வார்கள் அம்மா.

அவனால் நம்ப முடியவில்லை! அதற்குள் அம்மா என்னென்ன செய்கிறார்கள்! அந்தக் கைகளுக்குள் என்ன மாயை இருக்கிறது!

தாயுடன் அறுசுவைபோம் என்று அன்று சொன்னவன் சும்மாவா சொல்லி வைத்திருப்பான்?

இன்னும் காய்கறித் தோட்டம் காட்ட வேண்டும்! கொண்டை நாரான் மரம், பனைபோல உயர்ந்து நிற்கும். கறி வேப்பிலை மரம், சேனையில் நிற்கும் கொய்யா மரங்கள்...

அத்தனையும் பார்த்து, பறித்து, மென்று, துப்பி முடிய நேரம் சரியாகிவிடும். பிறகு நடந்த களைப்பு நீங்கக் கொஞ்சம் உட்கார, பகல் சாப்பாட்டு நேரம் வந்துவிடும். பகல் சாப்பாடு விருந்துதான்.

சாப்பிட்டு முடித்துக் களைப்பாறி அவசர அவசரமாகத் தேநீர் தயாரித்து அதையும் குடித்து ரெடியாகியதும் மலை போல் நிற்கும் படியேறும் படலம்! இருநூற்றி இருபது படிகளை ஏறி முடிப்பதென்றால்...

சாப்பிட்ட விருந்துச் சாப்பாடு, குடித்த தேநீர் அத்தனையும் எங்கேயென்று போய்விடும்!

கார்க்காரன் வந்து ஹார்ன் அடித்துக்கொண்டு நிற்பான்.

இதுதான் ஆண்டுக்கு இரண்டு தடவை அல்லது மூன்று தடவை என்று நடக்கும் அம்மா தரிசனம்! பழைய கதை.

அப்போதெல்லாம் அவ்வளவாகத் தோன்றுவது கிடை யாது. முழுமுதற் காரணமே அம்மா! அம்மாவின் பராமரிப்பு! தங்களைச் சுற்றிச் சுற்றி வந்து நிற்கும் அம்மாவின் அன்புவட்டம்!

இப்போது அம்மா படுக்கையில். ஒரு பழந்துணிபோல் கட்டிலின் ஒரு மூலையில் கிடக்கின்றார்கள்.

கையில் ஆட்ட ஓட்டமில்லை. கால்களில் ஒரு அசை வில்லை. உடலில் ஒன்றுமே இல்லை.

சீக்கிற்கோ தளர்ச்சிக்கோ இடம் கொடாத, உழைத்து உரமேறிய உடல் என்று அவனே பெருமைப்பட்ட உடல்தான்

இப்படிக் கசங்கி, நொடிந்து, நைந்துபோய் நார் நாராய்... கிடக்கிறது.

அவனையும் மருமகளையும் பேத்தியையும் கண்டதும் அந்தக் கண்களிலே ஒரு ஒளி! உதட்டிலே ஒரு சிரிப்பின் நெளிவு! அவ்வளவுதான். 'வந்துட்டியாப்பா!' என்னும் மனத்திருப்தி!

கைகள் போர்வைக்குள் நடுங்குவதுபோல் ஒரு துடிப்பு. கம்பளிக்குள் கையை விட்டு அம்மாவின் கைகளைப் பற்றிப் பிடித்தான். மனைவியினதும் மகளினதும் கைகளையும் உணர்வற்றுச் சோர்ந்து கிடக்கும் அந்தக் கைகளுடன் சேர்த்துப் பின் எடுத்துவிட்டான்.

இந்த மாதத்திலேயே இது இரண்டாவது வருகை. இரண்டு தடவையும் தம்பிதான் தந்தி கொடுத்திருந்தான்.

'அம்மாவை நம்ப ஏலாதிருக்கிறது. உடனே வரவும்' என்று.

அம்மாவைப் பார்த்த டாக்டர்கூட, "ஆஸ்பத்திரி அது இதெல்லாம் வேண்டாம்! மிஞ்சிமிஞ்சிப் போனா ரெண்டு மூணு நாள் தாங்கும்! எதுக்கு ஆஸ்பத்திரியில சாக விடணும்? ஆண்டு அனுபவிச்ச வீட்டுலயே இருக்கட்டும்" என்று சொல்லிவிட்டார்!

அம்மாவுக்கும் எழுபது பிந்திவிட்டதுதானே!...

அம்மா கண்களை மூடிக்கொண்டதும் வெளியே வந்து அவர்கள் நின்றுகொண்டார்கள்.

அம்மா எழுந்து நடமாடாத அந்தச் சின்னக் காம்பிராவை அவனால் கற்பனை செய்யக்கூட முடியவில்லை.

அம்மா சுற்றுமுற்றும் பார்த்து விழித்தார்களாம். வாயே திறக்காத அவர்கள் "அண்ணன் வரலையா?..." என்று மெதுவாகக் கேட்டார்களாம். பயந்துபோன தம்பி என்ன செய்வான்? தந்தி அடித்திருக்கின்றான்!

'இருங்கம்மா' என்று அம்மா இஸ்தோப்பில் இழுத்துப் போட்டு மகாராணி மருமகளை அமரச் சொல்லும் அந்த நாற்காலியில் ஒரு வெள்ளிக் குத்துவிளக்கு, பச்சை அரிசி, உறைந்து கட்டியாகிவிட்ட ஒரு போத்தல் தேங்காயெண்ணெய், ஊதுபத்தி மஞ்சள் இத்தியாதிகள் ரெடியாக இருக்கின்றன. அறுபதாம் பச்சைக் கொப்புகள் லோட்டாத் தண்ணீரில் தலையாட்டிக்கொண்டிருக்கின்றன.

மகன்களால் என்ன செய்துவிட முடியும் இப்படித் தயாராய் வைத்துக்கொண்டு சோகம் காட்டும் முகங்களுடன் சுற்றிவந்து நிற்பதைத் தவிர?

மூத்தவன்பாடு தர்மசங்கடமாக இருக்கிறது. எவ்வளவு நேரம் என்று இருக்க முடியும்?

நான் போகட்டா என்று எப்படிக் கேட்க முடியும்?... மனைவி மாதுளை மரத்தடியில், மகள் பாட்டியின் கால் மாட்டில்... சீக்கிரம் செத்துப் போம்மா என்று அம்மாவின் காதுக்குள் சொல்லவா முடியும்?

சென்ற முறையும் இப்படித்தான். இருந்திருந்து பார்த்து விட்டுக் கிளம்பிப் போய்விட்டார்கள்.

ஏழெட்டு நாட்களுக்குள் இரண்டாவது முறையாக வந்திருக் கின்றான் குடும்பத்துடன். கோச்சுக்காரனும், பஸ்காரனும் கார்க்காரர்களும் இவனைக் கடனாளியாக்குகின்றனர்.

அண்ணன் தம்பியையும் தம்பி அண்ணனையும் பார்ப்பதுவும் திரும்பிக் கொள்வதுவுமாக.

"இந்த முறை அம்மா.. ஏமாத்த மாட்டார்கள்..." என்று திக்கித் தடுமாறிக் கூறுகின்றான் தம்பி.

அண்ணன் குடும்பத்தை அனாவசியமாக அசௌகர்யத் துக்கு உள்ளாக்கிவிடுகின்றோமோ என்னும் ஒரு குற்ற உணர்வு தம்பிக்கு.

தம்பியின் வாயைத் தனது விரலால் மூடுகின்றான் தமையன்.

"டாடி, டாடி! பாட்டி எழும்புது!" என்று கத்திக்கொண்டே வெளியே ஓடி வந்தாள் மகள்.

எல்லாரும் உள்ளே ஓடி வந்து சுற்றி நின்றார்கள்.

அசையாமல் கிடந்த அம்மாவின் கை, ஓட்டை நகங் களுடன் கம்பளிக்கு வெளியே எழுந்து நிற்கிறது. வாயைக் குவித்துக் காட்டுகின்றார்கள் அம்மா.

"பாலூத்தச் சொல்லுங்க மூத்த மகந்தானே?" என்கிறது கூட்டத்துக்குள் இருந்து ஒரு கிழக் குரல்.

"...த...தண்ணி..." என்ற சத்தம் வருகிறது அம்மாவின் குழிந்த வாயிலிருந்து!

வெதுவெதுப்பான சூட்டுடன் வெள்ளித் தம்ளரில் தண்ணீர் வருகிறது.

மூத்தவன் கட்டில் விளிம்பில் அமர்ந்து அம்மாவின் தலையை உயர்த்தித் தண்ணீரைப் பருக்குகின்றான். மடக் மடக் என்று குடித்துவிட்டு அம்மா படுத்துக்கொண்டார்கள்!

குனிந்து படுக்க வைக்கும்போது அவனிடம் மெதுவாக அவனுக்கு மட்டும் கேட்குமாப்போல் கூறினார்கள் : "என்னயச் சுருக்கா செத்துப்போகச் சொல்றீங்களா?... பாலூத்தக் காத்திருக் கீங்களா?... கேட்டுதே ஒரு குரல்..."

கண்களை மூடிக்கொண்டார்கள்.

இமைக் கோடுகளில் ஈரம் கசிகிறது... அம்மா பேசினார் களா... அல்லது அவன் மனம் பேசியதா? அவனுக்குப் புரியவில்லை.

தம்பியும் மனைவியும் அவனை சோகமாகப் பார்த்தார்கள்.

இந்த முறையும் ஏமாற்றம்தான்.

"...நெறய.... செலவாகுமே பயணத்துக்கு?"

"பரவாயில்லை, வேற என்னதான் செய்யலாம்." என்றபடி கிளம்பினார்கள்.

கைக்கும் வாய்க்குமான வாழ்க்கை வாழும் நடுத்தர குடும்பம் அவனுடையது. கொழும்பில் இவன் போன்றோரின் வாழ்வே வித்தியாசமானது. அபூர்வங்கள் நிறைந்தது.

திடீரென்று குஷி வந்துவிட்டால் இருநூறு ரூபாய்க்கு ஐஸ்கிரீம் வாங்கித் தின்பார்கள். நூறு ரூபாய்க்குக் குடைவாங்க சங்கடப்பட்டுக்கொண்டு கழுத்தில் டையுடன் மழைக்கு கையை தலையில் வைத்துக்கொண்டு ரோட்டில் ஓடுவார்கள்.. அந்த வர்க்கத்தின் அச்சொட்டான பிரதிநிதிதான் இவனும். இல்லா விட்டால் முப்பது ரூபாயில் பஸ்ஸில் செல்வதை விடுத்து ஐநூறு ரூபாய் செலவு செய்து காரில் போவானா?

ஆண்டுக்கு இரண்டு தடவை என்றால் பரவாயில்லை..

இந்த பத்து பதினைந்து நாட்களுக்குள் இரண்டு தடவை என்றால்...

"அடுத்து எப்பங்க?... என்னா செய்யப்போறீங்க?..." என்றாள் மனைவி.

கேள்வியின் ரகசியம் அவனுக்கும் புரிகிறது. ஏற்கனவே இருந்த நகைகளை பேங்கில் வைத்தாகிவிட்டது. அடுத்த முறைக்கு என்ன செய்வது?

அம்மாதானே என்ன செய்திருக்கோம் அவுங்களுக்கு..? இதையாவது செய்வோம். சிலுவையாக நினைத்துக்கொள் ளாமல்.

அம்மா அவனை கடன்காரனாக்கிவிட்டுப் போகமாட் டார்கள்.. அம்மாவுக்குத் தெரியும்!

தன்னைத்தானே சமாதானமும் செய்துகொள்கிறான்.

அடுத்த நாள் ஆபீசில் சீ.சீ.யிடம் ஒரு கடன் விண்ணப்பம் எழுதிக் கொடுத்தான் நிலைமையை விளக்கி.

லஞ்ச் டைமில் சீஃப் கிளாக் அவனைக் கூப்பிட்டு அவன் கொடுத்த கடிதத்தை திருப்பிக்கொடுத்தார்.

அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது.. வட்டிக்குத்தான் வாங்க வேண்டுமோ? “ஐயாயிரம் வாங்கினாலும் மாசத்துக்கு எழுநூற் றைம்பது வட்டி கேட்பானே சில்வா. வட்டியைத்தான் கட்ட லாம், முதல் அப்படியே இருக்குமே என்று குழம்பிப் போனான் அவன்.

“இது தேவையில்லை” என்ற சீ.சி. தொடர்ந்தார். “டெத் ஃபண்ட் ஸ்கீம்” பற்றி உங்களுக்குத் தெரியாதா.. இந்த ஸ்கீம் அறிமுகமாகி ஆறேழு மாதங்கள்தான் ஆகின்றன. நிரந்தர ஊழியர்களுக்கு இந்த ஃபண்ட் கிடைக்கும். அதுவும் ஒரே நாளில் கிடைக்கும். ஆனால், இறந்தவர் ஊழியரின் அம்மாவாக அல்லது அப்பாவாக இருக்க வேண்டும்.

டெத் சர்ட்டிபிகேட் தர வேண்டும்.. உங்கள் சம்பளம் என்ன இப்போது?

“ஈ.பி.எஃப் கழிக்காம பதினாறு சார்”

“மூன்றுமாதச் சம்பளம் கிடைக்கும். யூ வில் கெட்டிட்.”

“தாங்க் யூ சார்” என்று எழுந்தான் அவன்.

அம்மா ஏமாற்றமாட்டார்கள்!...

★

# பாவ சங்கீர்த்தனம்

மலைக் குறுக்கில் இறங்கிவரும் கொழுந்துப் பெண்களாய் வளைந்து நீண்டு வரிசை குலுங்காமல் நின்றது 'கியூ'. குனிந்த தலை நிமிர்வதில்லை ஒருவரும். மனத்திலே புடைத்து நிற்கும் பாவத்தின் சுமை கயிறுகட்டி இழுத்துக் கவிழ்க்கிறது தலையை.

வெள்ளையும் இளநீலமுமாய்க் கடையும்போது உப்பிக் கிளம்பும் பஞ்சுக் கூட்டமாய் அமைந்துவிட்ட ஆகாயப் பின்னணியில் அழகாய் அமைதியாய் நிற்கும் அந்தத் தேவ மாதாவின் சொரூபத்தை நிமிர்ந்து நோக்கும் துணிவு ஒருவருக்கும் இல்லை. தாய்ச் சொல் கேளாத பிள்ளை கெட்டலைந்து, கேடு சூழ்ந்தபின் நீதான் துணை என்று நிமிர்ந்து நோக்கக்கூடாத அவமானத்துடன் அடிபார்த்து நிற்கும் அதே அவலநிலை. ஒவ்வொருவராக பாவ சங்கீர்த்தனத் தொட்டிலை நோக்கி நகர்கின்றனர்.

கோவிலின் கூரையைத் தொட்டுக்கொண்டிருந்தது. 'ஏம் மகானின் ஆடையை எட்டித் தொட்டாலும் என் பிணியிலும்' என்ற நம்பிக்கை இதற்கும்.

மரக்கிளையின் இலைக்கற்றை கூரைத் தகரத்தை வருடும் போது எழும் மெல்லொலிகூட மணி அறைந்த ஓசையில் ஒடுங்கி விட்டது. தனக்கும் மிக அருகில் முழங்காலில் மண்டியிட்டிருந்த ஒரு பெண்மேல்பட்டு லயித்த கண்களைப் பலவிதமாக இழுத் தெடுத்துத் திருப்பிக்கொண்டார் அவர்.

இந்த வயசிலும் இப்படி ஒரு பார்வையா? இப்படி ஓர் அல்பநினைவா? நெற்றி முற்றி முக்கால்தலை வந்துவிட்டது. பிறையாக நின்ற பின் மயிரிலும் வெள்ளை பின்னலிட்டு கிடக் கிறது. உடல் மூப்புக்கு உதாரணம் மனம்...!

புருவங்களுக்கிடையில் மூக்குத் தண்டின்மேல் நின்ற கண்ணாடி இணைப்புத் தங்கமாய் மின்ன, கசங்காத சூட்டும் கழுத்துப் பட்டியுமாக அவர் தோற்றம், உடம்பின் ஊட்டம் வயசைக் குறைத்தே கணிக்கத் தூண்டுகிறது, என்றாலும் மூப்பு மூப்புத்தான்.

கோவில் என்ற நினைவு மனத்தைக் குத்த, பாவைமேல் விழுந்த பார்வையைப் பகித்தெடுத்துப் பீடத்தைப் பார்த்து பின்பு விழியை உயர்த்தினார். 'இவர்கள்தான் எப்படி வருகிறார்கள் கோவிலுக்கு, புடவைக் கடையில் காட்சிதரும் கண்ணாடிப் பொம்மையாய்' என்ற மன ஓட்டத்துடன்.

உயர்ந்த அவர் விழிகளுக்குள் ஊடுருவிப் பாய்ந்தன மாதாவின் விழிகள். 'தெய்வம் ஒரேநேரத்தில் எல்லோரையும் பார்க்கிறது, என்பதை உறுதிப்படுத்துவதுபோல் மாதாவின் கண்களைப் பார்ப்பவர்களைப் பார்ப்பதுபோல் அமைந்துள்ள அந்தக் கண்களின் தீட்சண்யத்தைத் தாள இயலாதவராய்ப் பார்வையை ஒதுக்கி மேகப் பின்னணியைப் பார்த்தார். மேகக் கூட்டத்தின் மென்மை மனத்தைத் தடவியது. மோரில் மிதக்கும் வெண்ணெய் உருண்டையைத் தொடுவது போன்ற மென்மை யுடனும் குளிர்ச்சியுடனும்.

அமர்ந்த பெண் எழுந்தாள். குதி உயர்ந்த சப்பாத்தின் வெள்ளிக்கூர் தரையைத் துளைக்க நடந்துவிட்டாள்.

அவள் சென்று மறைந்த திக்கில் பார்வையை ஒருவிநாடி இரைத்துவிட்டுப் பாவ சங்கீர்த்தனத் தொட்டிலில், குனிந்த தலைக்கு இணைவாக இடக்கையை நெற்றியில் ஊன்றிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் சுவாமியாரைப் பார்வையால் துழாவுகிறார்.

ஒரு சத அகலத்துக்கு முன் துறந்த உச்சியே கண்ணில் பட்டாலும் சுவாமியாரின் முகம் மனதில் படுகின்றது.

'ஹெய்ல் மேரி புல் ஆப் கிரேஸ்
தி லோட் இஸ் வித்தீ...'

அதரங்கள் ஆடுவது தெரிகின்றது. வலக்கையில் சுருண்டு கிடக்கும் ஜபமாலையின் ஒரு முத்து உள்ளங்கையில் வழிந்து இறங்குகிறது. அடுத்த முத்து, கட்டை விரலிடை உருளுகின்றது.

'ஹெய்ல் மேரி...'

'பிரிய தத்தத்தினாலே பூரண மரியாயே வாழ்க' என்ற ஜபத்தைத்தான் அவர் ஆங்கிலத்தில் உதறித்தள்ளுகிறார். அந்த ஜபம் அவருக்குச் சிங்களத்திலும் தெரியும். சிங்களத்தில் ஜபம் செய்வது தம் அந்தஸ்துக்குச் சரியல்ல என்பதுடன் சிங்களத்தில் ஜபத்தைச் சொல்வதிலும் பார்க்க ஆங்கிலத்தில் சீக்கிரமாகச் சொல்லிவிடலாம் என்பதும் ஒரு காரணம். இதற்கென்றே பெரும் பான்மையோர் மந்திரங்களை ஆங்கிலத்திலேயே மனனம் செய்துகொள்வது உண்டு. கீழ்வகுப்புப் பிள்ளைகள் பெருக்கல் வாய்ப்பாடு ஒப்பிப்பதுபோல.

உலகத்தின் அசுர வேகத்துடன் இணைந்தோட இறை வணக்கத்திலும் ஒரு வேகம். வெறும் உதட்டாட்டம். ஜபத்தின் கருத்து மனத்தைத் தீண்டமுடியாத ஒரு வேகம்.

ஜபமாலையின் முத்துகள் ஒவ்வொன்றாய் ஊர்ந்து இறங்கு கின்றன. கட்டைவிரல் முத்துகளைச் சீராக உருட்டி இறக்கு கின்றன. உதடுகள் சீராக அசைகின்றன. மனம் சுவாமியாரைப் பற்றி எண்ணுகிறது. இருவரும் இறுகப் பழகுபவர்கள். ஐயாமேல் சுவாமிக்கு ஒரு மானசீகமான மதிப்பு.

மார்புவரை தொங்கும் தாடியை இடக்கையால் நெருடிய வண்ணம், போனவாரங்கூட சுவாமியார் கூறினார். 'நல்லவர்கள் அங்கிகளுக்குள் மாத்திரம் நுழைந்து கொண்டவர்களாய் இருக்கக்கூடாது. உங்களைப்போல் வெளியேயும் இருக்க வேண்டும்' என்று.

ஐயாவின் இல்லத்தில் சுவாமியார் எத்தனையோ தடவை இராத் தங்கல் போட்டிருக்கிறார்.

தேயிலைத் தோட்டங்களிலே ஐந்துக்குக் காலாய், கஞ்சியிற் பயிரெனக் கிடக்கும் கிறிஸ்துவத் தொழிலாளர்களுக்குக் கோவில் வசதியோ பூசைகாணும் வாய்ப்போ இல்லை. பெரும்பான்மை

யினர் இந்துக்கள். எனவே தோட்டத்துக்கு ஓர் இந்துக் கோவில் இருக்கும். கிறிஸ்தவர்கள் பூசைகாண வேண்டுமென்றால் கடல்கடந்து செல்லவேண்டும் நகரத்துக்கு, படம் பார்க்கப் படும் சிரமத்தை யார் பக்தி மேலீட்டால் படப்போகிறார்கள்?

இவர்களும் பாவ சங்கீர்த்தனம் செய்து பூசை கண்டு, திவ்விய நற்கருணை பெற வசதி செய்து கொடுக்கும் உயர் எண்ணத்தால், பட்டணத்தில் இருக்கும் பாதிரியாரே தோட்டங் களுக்குச் சென்று பூசை வைப்பதுண்டு. மாதத்திற்கு ஒரு முறை என்று.

ஐயா இருக்கும் தோட்டத்தில் பூசை என்றால் அது ஐயாவின் பங்களா ஹாலில்தான். அந்தத் தோட்டத்தில் உள்ள அத்தனை கிறிஸ்தவர்களுக்கும் ஐயா செய்தி அனுப்பிவிடுவார் 'இன்று மாலை பூசை' என்று.

தாம் அந்தத் தோட்டத்தின் தலைமைக் குமாஸ்தா என்பதைக்கூட மறந்து தொழிலாளர்களுக்குத் தம் பங்களாவி லேயே ஒரு சிறிய தேநீர் விருந்து கொடுத்தனுப்பும் பெரியவரின் பெருந்தன்மை கண்டு பூரித்துப் போவார் சாமியார். பூசைக்கு வந்தவர்கள் எல்லாரும் சென்றபின் இருவரும் வெகுநேரம் பேசிக்கொண்டிருப்பார்கள். முன் ஹாலில் அமர்ந்து பேசு வார்கள். உள் அறையில் உட்கார்ந்து பேசுவார்கள். சாப்பாட்டு மேசையில்கூட உணவை மறந்து உரையாடுவார்கள்.

தட்டுகளைக்கூட நகர்த்த முடியாதபடி விதத்துக்கு ஒன்றாய் நிறைந்து கிடக்கும் பலவகை உண்டிகள் குளிர்ந்து கிடக்கும். பெரியவரும் சுவாமியாரும் பேசிக்கொண்டிருப்பார்கள். பூனைக் கண்ணாய் மின்னும் சாப்பாட்டறைச் சுவர்க் கடிகாரத்தின் பெண்டுலம் எழுப்பும் மெல்லொலியே பேரொலியாய் அதிரும் இரவின் அமைதியில் இருவரும் வெளியே வந்து, பலாமரத்தின் அடியில் கிடக்கும் சிமிந்திப் பலகையில் அமர்ந்துகொள்வார்கள். ஆர்வம் மிக்கவர்களின் உழைப்பால் அழகுபெற்ற அந்த மலைச் சரிவுகளின் சூதால் சுயநிறம் இழந்து கறுப்பாய்த் தோன்றினாலும், அதுவும் கண்ணுக்கு ரம்மியமாகத்தான் இருக்கிறது – பெண்ணின் நிழல் போல.

இரவின் அமைதியில் இருவர் தனிமையில் பேசிக் கொள்ளும் பேச்சுக்குத்தான் எத்தனை மாயசக்தி!

சவர்க்காரத்தின் மணற் குறுணி கன்னத்தில் கீறினாற்போல் தாம் எப்போதோ செய்த இரண்டொரு பாவத்தின் நினைவு மனத்தைக் கீற, தம்மிலே ஒரு தீனத்துடன் சுவாமியார் நினைத்துக்

கொள்வார், 'அங்கிக்குள் இருக்கும் என்னை விட ஆபீசில் இருக்கும் இவர் எத்தனை உயர்ந்தவர்' என்று. அதே நேரத்தில் ஐயா கூறுவார், 'எண்ணிப் பார்த்தால் என்ன சுவாமி இருக்கிறது இவ்வுலக வாழ்வில் – ஒன்றுமே இல்லை!' என்று.

அடிவானமும் மலைமுகடும் ஆரத் தழுவிக்கொள்ளும் அந்தத் தொலைதொட்டு அருகே தலைக்கு மேலாகப் பந்து பந்தாய்க் காய்த்துத் தொங்கும் மாதுளை மரம் வரை ஒரு கணம் மறைந்துவிடும், சுவாமியாரின் பார்வையில்.

கண்களை இறுக மூடிக்கொள்வார். ஐயாவின் பேச்சில் அத்தனை லயிப்பு.

இரண்டு மணிக்குமேல் படுத்தாலும், அதிகாலையிலேயே எழுந்து சுவாமியாரைக் கவனித்து அனுப்பி வைப்பார். 'நல்லவர்கள் பாவ சங்கீர்த்தனத் தட்டில்... நன்றாகத்தான் இருப்பார்கள்!" என்ற நல்லெண்ணத்துடன் சுவாமியார் விடை பெறுவார்.

அதே அவர்தாம் இதோ பீடத்தின் அருகே உட்கார்ந்து இருக்கிறார், பாவ சங்கீர்த்தனைத் தட்டில், மனம் எதை எதையோ உருட்ட, கை சீராக ஜபமாலையை உருட்டுகிறது.

பாம்பாய் நெளிந்த 'கியூ' பாதியாய் குறைந்துவிட்டது.

'இவரிடம் நான் பாவ சங்கீர்த்தனம் செய்வதா?' ஏதோ ஒன்று பற்றிக்கொண்டு வந்தது, புகையும் பொருமலுமாய். நெருப்பின் மேற் கிடக்கும் சருகின்நிலை.

காலணி எழுப்பும் ஓசையைக் கட்டுப்படுத்த நுனிக்காலை மெதுவாக ஊன்றி வெளியே வந்தார். அரை முழங்காலிட்டு வெளியே வந்தவர் காரில் ஏறிக்கொண்டார். தொட்டு ஒற்றிக் கொண்ட தூயநீர், விரல் நுனியிலும் நெற்றிப் பொட்டிலும் ஈரமாய் நின்றது.

சிவப்பாய்ப் பூத்துநின்ற பென்னம் பெரிய மரங்களிடையே கறுப்புப் பட்டையாய் நெளிந்த தார்ரோட்டில் வழுவிக்கொண்டு ஓடுகிறது கார். முன்கையில் சுருண்ட ஜபமாலையும் முகத்தில் அமைதியுமாய் பின் சீட்டில் அமர்ந்த ஐயாவின் பக்திகண்டு அவர்மேல் பக்திகொண்டு, பாதையில் சென்ற பார்வையை ஒரு விநாடி கண்ணாடி வழியே ஐயாமேல் பாய்ச்சிப் பெருமிதம் கொண்டார் காரோட்டி.

வெளித் தோற்றம் கண்டு கணக்கிடும் இயல்பு. மெரினாவில் நிற்கும் காந்தி சிலையாய் யாரென்று கூறமுடியாதவாறு அமைந்துவிட்ட பண்டாரநாயக்காவின் சிலை, நகரசபைக்

கட்டடம், அரசாங்க ஆசுபத்திரி ஆகியவற்றைப் பின்னே தூக்கிப் பாய்ந்தது கார். நகர எல்லை தாண்டியதற்கு அறிகுறியாக அடுக்குக் கட்டடங்கள், ஆரவாரம் ஆகியவை மறைந்து இரு மருங்கிலும் எழுந்து நிற்கும் தேயிலையின் இருண்ட அமைதியில் மறைந்தோடிய பாதையைத் தேடி விரைந்தோடியது கார்.

பதுளை மாதா கோவிலிலிருந்து வெளியே வந்த ஐயா, இங்கே கூட்டங்கூட, **பண்டாரவாளை கோவிலுக்குப் போ என்றார்**

அவன் போகின்றான். இடைத் தூரம் பதினைந்து கல். அவனுக்கு என்ன, 'ஐயாதாம்' என்றால் முதலாளி என்ன சொல்லிவிடப் போகின்றார்? ஐயாவும் முதலாளியும் அந்நி யோந்நியம், வெகு அந்நியோந்நியம்.

இந்தப் பதினைந்து கல்லைத் தாண்டி அவர் பாவ சங்கீர்த்தனம் செய்யப் போகிறார். அவருடைய பக்தியை, மதப் பற்றை, அவன் வியந்ததில் வியப்பில்லை.

தேயிலைத் தோட்டத் தலைமைக் கிளார்க்கின் மதிப்பு, பதவியின் பவிசு தெரிந்தவர்களுக்கே தெரியும். தோட்டத்துக்கு ராஜா போன்றவர் துரை. அந்தத் துரை ராஜாவுக்கு இவர் மந்திரி; நிர்வாகத்தின் நிதி அமைச்சர்.

இப்போது ஓடுகிறதே ஓடம்போன்ற இந்தக் கார் – புகர் நிறக் கேம்பிரிட்ஜ் – நகரத்திலுள்ள முதலாளி ஒருவருடையது. இவருடையதைப்போல் பாவித்துக்கொள்வார்.

அது காட்டுவது முதலாளியின் தாராளத்தை அல்ல; தந்திரத்தை. இவரையும் முதலாளியையும் இணைக்கும் உறவு நூல் இம்மி நெகிழ்ந்தாலும் தோல்சிராய்ப்பு முதலாளிக்கு; இவருக்கு அல்ல.

'இவர்கள் அனுப்பும் பொருள்கள் சாம்பிள்களுடன் ஒத்துப் போவதில்லை' என்ற ஒரு குற்றச்சாட்டுப் போதும். 'வேறு இடத்தில் வரவழை' என்பார் துரை. முதலாளியின் வியாபாரம் துண்டுபடும். வியாபாரம் என்றால் சாமானியமான வியா பாரமா? மாதத்துக்கு லட்ச ரூபாய் வியாபாரம் ஆயிற்றே! இவர் கொடுக்கும் கமிஷனை அந்த மற்றவர் கொடுக்கமாட்டாரா என்ன? ஆகவேதான் பெரியவரின் மனம் நோவாமல் நடந்து கொள்கிறார் முதலாளி.

ஈரைந்து மைல் எட்ட உள்ள எஸ்டேட்டிலிருந்து இரண்டு ராத்தல் இறைச்சி வேண்டும் என்பார் ஐயா. முதலாளி தம்முடைய காரில் அனுப்புவார்.

என்ன செய்வது? தோட்டம் ஊற்றும் நீரைக் குழாயாய் நின்று கொணர்ந்து ஊற்றுவது அவராயிற்றே. திசைமாறி விட்டால்....?

முதலாளி கடையில் இருந்துகொண்டே ஐயாவைப் பங்களாவுக்கு அனுப்புவார் சாப்பிட. அத்தனை இறுக்கம்.

வற்புறுத்தலின் பேரில் முதலில் போனவர் அப்புறம் அப்புறம் தாமாகவே போகத் தொடங்கினார். நிழலிலே நின்று நிழலிலேயே வளர்ந்த முதலாளியின் இளம்மனைவி கீரைத் தண்டுபோல் இல்லாமல் எப்படி இருப்பாள்? சுண்டினால் ரத்தம் கன்றி நிற்கும்; அப்படி ஒரு நிறம்.

உட்கார்ந்தால் நாற்காலி வழியும். அம்மா இருக்கிறார்கள் வீட்டில். இவருக்கு எருமைக் குணம். சேற்றில் புரள வேண்டும். கன்னப் பட்டை கட்டி வெளியே அனுப்ப இவர் என்ன வண்டிக் குதிரையா?

பெரியவர்தாமே என்று சற்றுத் தாராளமாகவே பழகிய பெண்ணுக்கு, இவர் உத்தியோகத்தில் மட்டுந்தான் பெரியவர் என்ற உண்மை, ஐயா அடுத்தமுறை சாப்பிட வந்தபோதே தெரிந்துவிட்டது.

மார்புக்குள் மறைந்து கிடந்த தாலிக்கொடியை உருவி மார்புச் சேலைக்கு மேல் வழியவிட்டிருந்தாள், நெருப்புக் கொடியாய். இவர் சிங்களவர். பண்பின் சமிக்ஞையை உணரும் சக்தி இல்லாமல் இருந்திருக்கலாம்.

'மோகம் அகமியாகமனம் பண்ணாதிருப்பாயாக' பரதாரத்தை அபேட்சியாதிருப்பாயாக' என்ற தேவ கட்டளை கூடவா மறந்துவிட்டது? அதைத்தான் மனனம் செய்து வைத்துக் கொண்டு மந்திரம் படிக்கிறாரே!

கோவிலில் மண்டியிட்டுக் கூறமட்டும்தான் ஜபம் என்றால் அந்த ஜபத்தை படிக்க வேண்டிய அவசியம்...?

இவருக்குக் கீழ் வேலை செய்யும் இரண்டாவது குமாஸ்தா வின் மனைவியைப் போல முதலாளியின் மனைவியும் இருப்பாள் என்று பெரியவர் தப்புக்கணக்கு போட்டுக்கொண்டதன் விளைவு...?

பெரியவர் முதலாளியின் வீட்டுப்பக்கம் போவது அறு பட்டது; நாள் கிழமை என்றால்கூடக் கெட்டவர்கள் கெட்டவர் களை வைத்தே மற்றவர்களைக் கணித்துக்கொள்கிறார்கள்.

யாரை நோவது? தோட்டத்தில் போடும் ஆட்டத்தை வெளியே போடமுடியாத புகைச்சல் பெரியவருக்கு. இரண்டாவது மனைவி – அவள் என்ன செய்வாள், பாவம்! ஊர்விட்டு ஊர் வந்திருக்கின்றார்கள் பிழைக்க. யாழ்ப்பாணத்தில் வீடுகட்ட எல்லா ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. முழுச் சம்பளத்தையே மீதம் செய்யும் அளவு கிம்பளம் தேடும் திறமை அவர்களுக்கே கைவந்தது. இல்லை என்றால் சாதாரண நூற்றைம்பது ரூபாய்க்குத் தோட்டத்துள் நுழைபவர்களுக்குப் பத்து வருடத்தில் அங்கே பங்களா ஒன்று முளைக்குமா? எப்படியோ வாழலாம் என்றால் பிறகு என்ன?

எந்த நேரத்தில் ஆரம்பித்தாரோ, அந்த வாரத்திலேயே சின்னவர் மாட்டிக்கொண்டார். ஆடிட்டர்மார்களின் திடீர் வரவு இவர் கிம்பளம் தேடும் இடத்தில்போய் நின்றது.

பெரியவருக்கு வேண்டுமென்றால் அதையெல்லாம் சரிக்கட்டத் தெரியும், அவரா...?

விஷயத்தைப் பெரிதுபடுத்தித் துரைவரையில் ஓட்டிவிட்டு ஆதாயத்தைப் பார்த்துக்கொண்டார். 'நான் சிங்களவன், நீ யாழ்ப்பாணத்தான்' என்ற துவேஷம்.

வேலை பறிபோகும் நிலைகூட வந்துவிட்டது. ஆரம்பித்த வீட்டு வேலை என்ன ஆவது? ஐயா திகைத்தார். அம்மா திணறினாள். ஊரில் உள்ளவர்கள் மென்று துப்புவார்களே என்ற கௌரவ பங்கம், தன் ஊர் ஆட்களைப்பற்றி அம்மாவுக்குத் தெரியும். யாழ்ப்பாணத்து மணல் காலை மட்டுமே சுடும். மக்களோ மனத்தையே பொசுக்கிவிடுவார்கள்.

பெரிய ஐயாவிடம் சென்று, தெரியாமல் நடந்துவிட்டது பிழை, மானேஜரிடம் கேட்டு மன்னிப்புப் பெற்றுத் தாருங்கள் என்று கேட்பதற்காக, அந்தி இறங்கியபின் சின்ன ஐயா நடந்தார் அம்மாவுடன், பெரியவரின் பங்களாவுக்கு.

வீடுதேடி வருபவர்களுக்குப் பெரியவர் கட்டாயம் உதவி செய்வார், 'இருக்குமிடம் தேடி வந்தானே' என்று.

பெண்ணின் கண்ணீருக்குச் சக்தி என்பதால்தான் சின்னவர் மனைவியையும் கூட்டிச் சென்றார். கண்ணீரைவிட அந்தக் கண்களுக்கே சக்தி அதிகம் இருப்பதைக் கண்டார் பெரியவர்.

இருதய ஆண்டவர் படமும், அணையாத சிவப்பு விளக்குமாய், அமைதியாய்க் காட்சியளித்த முன்னறை, கோவிலைப் பிரதிபலித்தது. முன்னறையை விட்டு உள்ளறையில் அமர்ந்தே பேசினர் நால்வரும்.

ஆண்டவனிடமிருந்து மறைந்து நிற்கவே ஆசைப்படுபவர் பெரியவர். தாம் ஆணி அடித்து மாட்டிவிட்ட இடத்தில்தான் ஆண்டவன் இருக்கிறான் என்னும் அந்தக நினைவு.

கணவனின் வேலைத் தகராறு வெகு சிறிதாகப் பட்டது சின்னவரின் மனைவிக்கு, பெரியவரின் கண்களைப் பார்த்ததும், கண்வரியில் கொக்கியிடும் போதையைப் பார்த்ததும்.

பெரியம்மாவுடன் சின்னம்மாவைச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்க விட்டுச் சின்னவர் தனியே வரவேண்டியதாயிற்று.

வெளியே சுருக்கத்தான் வந்தாள். இடைவெளி சுருங்கிய துடன் இணையவும் வேண்டி வந்து விட்டது.

அதன்பின் நடக்கும் அத்தனை பாவங்களுக்கும் அந்த முதல் நடையே காலாய் நின்று பந்தல் போட்டது.

இரண்டு மணிநேரம் 'லீவு' சிபார்சு செய்யவே எருமை யாய்க் கொம்பாட்டும் பெரியவர், இரண்டு மூன்று நாள் என்று லீவு வாங்கிக்கொடுத்து இவரை யாழ்ப்பாணம் அனுப்புகின்றார் என்றால், சின்னம்மாவின் தனிமையை அவர் எத்தனை தூரம் எதிர்பார்க்கின்றார் என்பது வெளிச்சமாகின்றதல்லவா?

யாழ்ப்பாணம் எங்கே, மலைநாடு எங்கே? இரண்டுக்கும் எட்டாத தொலை. இருவருமாகப் போவது என்றால், அதுவும் அடிக்கடி – கோச்சிக்காரனே கடன்காரனாக்கி விடுவானே!

சின்னவரின் அம்மாவை வெள்ளிக்கிழமை நாட்களில் பெரியவரேகூடப் பார்க்கமுடியாது. மூன்று மணிக்குச் சுவாமி அறையுள் நுழைந்தால் வெளியேவர ஏழாகும். அப்படி ஓர் அசுர பக்தி.

கட்டிக்கொள்ளும் பாவங்கள் கனமானவை. ஆகவே காட்டிக்கொள்ளும் பக்தியும் கனமாக இருக்கிறது

ஐயாவின் காட்டுத்தனம் தோட்டம் அறிந்த ஒன்று. சின்னவருக்கும் தெரியும். 'சின்ன விஷயம்' என்று இருந்து விட்டார். பெரியம்மாவுக்கும் தெரியும். பெரிதுபடுத்திக் கொள்ள வில்லை.

ஆரம்பத்தில் காதைக் கடித்துக்கொண்ட மற்றவர்கள் பிறகு உதட்டைக் கடித்துக்கொண்டார்கள். ஊர் பார்க்கிறது என்றதும் இவர்கள் கண்களை மூடிக்கொண்டனர். அதுவும் தைரியந்தான்.

கிழமைக்கு ஒரு நாள் பாவ கீர்த்தனம் தவறுவதில்லை. பூசை தவறுவதில்லை. திவ்விய நற்கருணை பெறுவது தவறுவதில்லை.

பாவ சங்கீர்த்தனம் பண்ணுவது, பழக்கம் இல்லாத சுவாமியாரைத் தேடி, திருச்சபையையே ஏமாற்றிவிட்ட பெருமையுடன்.

ஒருவாரம் செய்த பாவங்களைச் சுவாமியார் ஒருவரிடம் சொல்லிவிட வேண்டியது. அடுத்த வாரத்துக்கான பாவங்கள் அடுத்த வாரத்தில் ஒரு நாள்.

குப்பைத் தொட்டி நிறைவதும் காலிபண்ணுவதும் பிறகு நிறைவதும்போல. அதுவா பாவ சங்கீர்த்தனம்? அவருக்குமா பாவ மன்னிப்புக் கேட்கிறது?

அதோ ஆள்காட்டி விரல் தொட்ட ஆகமநீரை நெற்றியில் இட்டவண்ணம் காரில் ஏறும் பெரியவரின் முகம் காட்டும் திருப்தி; அவருக்குப் பாவமன்னிப்புக் கிடைத்துவிட்டதில் ஏற்பட்ட திருப்தியா? தான் பாவ சங்கீர்த்தனம் செய்துவிட்டார் என்பதில் ஏற்பட்ட திருப்தியா?

*(கலைமகள் – டிசம்பர், 1964)*

★

## சிலுவை

அந்த நாற்பது காம்பிரா லயத்தில் நாலாவது காம்பிரா மட்டும் மஞ்சள் குளித்த பெண்போல் தனியாகத் தெரிகிறது. எல்லாச் சுவர்களுமே புகைமண்டிப்போயும், சாணிப் பூச்சில் வெடிப்பு கண்டும் இருக்கையில், நாலாவது காம்பிராவின் அரைச் சுவர் மட்டும் புது மெருகுடன் வெள்ளை மண் பூசப் பட்டு சுண்ணாம்படித்த சுவர் போல் காட்சியளிக்கிறது.

கிளாக்கரய்யா பங்களாவுக்கு வெள்ளையடிக்கத் தள்ளப் பட்டபோதே நைசாகக் கண்டக்டரய்யாவிடம் சிலுவை கேட் டான், 'ஏவுட்டு காம்பிராவுக்கும் ஒரு ஓட்டு ஓட்டிக்கிடங்களா' என்று.

'மூச்! காட்டப்படாது' என்றுட்டார் கண்டக்டரய்யா. 'ஆடிப் பூசை நேரத்துல லயக்காட்டுக்கு வெள்ளை அடிக்கயில தான் அடிக்கணும்.. இப்ப ஒண்ணும் சரிப்படாது' என்று கூறிய் அய்யாவுக்கு 'கிளாக்கரய்யா வேதந்தானுங்களே நானும். அவரு போற கோயிலுக்குத் தானுங்களே நானும் போறேன்' என்று கொஞ்சம் வாதாடிப் பார்த்தான்.

'சரிதான் போடா! அய்யாதான் நீயா? அய்யா பங்களா தான் உன் காம்பிராவா? அய்யா கும்பிடுற சாமிதான் நீ கும்பிடுற

சாமியா...?" என்று அவர் அடுக்கிய கேள்விகளுக்கு ‘ஆம்’ என்றும் சொல்ல முடியாமல் ‘இல்லை’ என்றும் சொல்ல முடியாமல், சுண்ணாம்படிக்கும் மிஷினை தோளில் மாட்டிக் கொண்டு நடந்து விட்டானென்றாலும் கிளாக்கரய்யாவின் பங்களா சுவற்றில் தனது வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டான். ‘மிஷின்ல அடிச்சா பளீரெனத் தெரியாதே சிலுவை. கொஞ்சம் புருசாலையே அடிச்சுவிடு’ என்று அய்யா கூறியதற்கு ‘சரிங்க’ என்றவன் ‘புருசிலயா அடிக்கனும். இரு ஒன் பொடரியில அடிக்கிறேன்’ என்று கறுவிய படி ‘பூஸ் பூஸ்’சென்று சுவற்றில் சுண்ணாம்பு நீரால் மருந்தடித்துவிட்டு நடந்துவிட்டான்.

சிமிந்தித் தரை மாத்திரம் வெள்ளை வெளேரென்று கிடந்தது.

அவனுடைய காம்பிராவும் வெள்ளை வெளேரென்று கிடந்தது.

வெள்ளை மண் வாங்கிலிருந்து யாருக்கும் தெரியாமல் இரண்டு வாளி மண் கொணர்ந்து கரைத்துப் பூசி வெளுக்க வைத்திருக்கின்றாள் அவன் மனைவி.

‘வீடு தீத்துறேன் வீடு தீத்துறேன்’ என்று தோட்டத்து ஆட்கள் அத்தனை பேரும் தோண்டித் தோண்டி வெள்ளை மண் வாங்கி பொந்து பொந்தாய்க் கிடக்கிறது. வாங்கி ஓரத்தில் வரிசையாக நிற்கும் ஒரு பத்துப் பதினைந்து தேயிலைகள் ‘இப்ப விழுவேனோ, இன்னும் சற்றுப் பொறுத்து விழுவேனோ’ என்று ஆட்டம் கண்டு போய் நிற்பதால் யாரும் மண் தோண்டக் கூடாது என்பது துரையின் உத்தரவு.

மண் பூசியிருக்கும் சுவரைப் பார்த்தால் பரவாயில்லை. தோண்டும்போதுதான் பார்த்து விடக்கூடாது!

முழங்காலை மடித்துப் பலகைக் கட்டையில் உட்கார்ந்து, மடித்துக் கட்டிய வேட்டியை இழுத்துவிட்டுக்கொண்டான். கோப்பையை முழங்காலில் நிறுத்தி இடக்கையால் சாப்பிடத் தொடங்கினான்.

‘லபக் லபக்’கென்று அவன் அள்ளி வீசிக் கொள்ளுவதைப் பார்த்தால் சாப்பிடுவதில் ஒரு சந்தோஷமோ அமைதியோ இருப்பதாகப் படவில்லை.

‘கோப்பை எப்போ காலியாகும்’ என்ற நோக்கத்துடன் சாப்பிடுபவன் போல் தெரிகிறது.

அவன் சாப்பிடுவதை அதிசயத்துடனும், ஆத்திரத்துடனும் பார்த்துக்கொண்டு நிற்கின்றாள் அவன் மனைவி.

‘ஈருகோலியாலே, பேனுலுக்கேனெ ஏன் இப்படி உலுப்பிக் கிறே.. ஒரு பொட்டாச்சும் ஓடல்லே ஒட்டுமா? ஆற அமர சாப்புட்டாக்க என்ன கொறையுதாம்..?’

‘ஹ்க்கும், சாப்பாடு ஒண்ணுதான் இப்ப கொறைச்சலு... தேதி பதினெட்டாச்சு. சம்பளம் போட்டு எத்தினி நாளாவது... அந்தப் பயிலைக் காணலியே.. டோக்கரு குடுத்துருவானா...?’

‘அதெல்லாம் ஒண்ணும் குடுக்கமாட்டான். நீயி சாப்பிடு. அம்ம சீட்டெக் குடுத்துட்டியா...?’

‘நல்லா குடுப்பனே... சீட்டு தொவங்கினப்பவேருந்து சொல்லிக்கினு வந்தேன், கிறிஸ்மாஸுக்கு எனக்கு வேணும்னு.. சரின்னுதானே சொன்னான். முந்தநாத்துக் கேட்டேன். ‘இன்னம் பிரிக்கலேப்பான்னான்’ ஏவுட்டு சீட்டைக் கிழிச்சிக்கிட்டு குடுன்னுட்டேன்...’

‘முந்தாநா கொட கேட்டிருக்கீங்கல.. அப்புறம் என்னா...

‘அப்புறம் என்னாவா... ஏண்டி சொறணை கெட்ட இதே, இன்னைக்கு தேதி எத்தினி... பதினெட்டல்ல. நாளைக்கும் நாளான்னிக்கும் போனா அப்பறம் எத்தனை நாலு இருக்கு.. சொவுத்துக்குத்தான் சுண்ணாம்பு இல்லேன்னதும் மண்ணெப் பூசிப்புட்டே....! ஒம் பொறுப்புகளுக்கு பெத்து வச்சிருக்கியே நாலெ.. ஒன்னு பாவாடைங்கும் மற்றது ரவுக்கைங்கும் மற்றது சட்டேங்கும் பட்டாசுங்கும் பலூனுங்கும் ரொட்டிங்கும்... எங்கே போறது.. பொட்டில வச்சிறிக்கியா.. எடேன்..’

சோற்றை உருட்டிப் போட்டுக் கொண்டவன் அவளை ஏளனமாகப் பார்க்கின்றான்.

‘இந்தா சும்மா போட்டு ஒளப்பிக்கிறாதே... ஆடிப்பூசை பொங்கல் தீவாளின்னா எல்லாப் புள்ளைங்களும் புதுச் சட்டை போட்டிருக்கும். இதுகளுக்கும் வாங்கிக் குடுக்காட்டி ஏமாந்து போயிறுங்கன்னு சொல்லலாம். இப்ப என்ன... நாம மட்டும் தானே ரெண்டு பாவாடை சட்டையை தொவச்சிப் போட்டுக் கிட்டாக்க போவுது’ என்றவளை முறைத்துப் பார்த்தபடி எழுந்து கையைக் கழுவிக்கொண்டு வெளியேறினான்.

‘லயத்தில போயி அவனைப் பார்த்து சீட்டுக் காசை தாரியா இல்லியான்னு ரெண்டுல ஒன்னு கேட்டுக்கினு வந்துடுறேன்’ என்று அவளிடம் கூறியவன் ‘ரெண்டு போட்டுக்கிட்டாத்தான் ரெண்டுல ஒன்னுன்னு கட் அன் ரைட்டாப் பேசலாம்’ என்ற வாறு நடையை மாற்றிவிட்டான்.

'இன்னம் ஒரு எளவுகூட வாங்கலே.. பெருநாளு வருது.. என்னா சொல்றே...' என்றபடி அறைச் சுவரைப் பிடித்துக் கொண்டு படியேறிய சிலுவை தள்ளாடினான். 'பொன்னுக்கு வீங்கியதுபோல் முகம் மினுமினுத்தது. கண்கள் சிவப்பாக துருத்திக்கொண்டு நின்றன.

'அடடே சிலுவையா, ஓட்டு சிலுவையை நீயே தூக்கினு தானே வர்ரே வா, வா, நானே வந்து ஒன்னைப் பாக்கணும்னு இருந்தேன்...'

'நீயா வரணுமின்னு இருந்தே...! சீட்டுக் காசு வாங்கயில மட்டும்தானே வருவே. குடுக்கயில எங்க வரப்போற...'

'ஏம்பா என்னையும் உன்னை மாதிரி நெனச்சுக்கிட்டியா? நீ மட்டுந்தான் சீட்டுக்காசு தரல்லே... மற்ற ஒன்பது பேரும் குடுத்துட்டாங்க..' 'எனக்குத்தானே இந்த சீட்டு வேணுமின் னேன். மற்றதை எல்லாம் குடுத்திடுறேன்...'

'குடுத்திடலாம் ஆனா.. நம்ம 'நயிட்டிஸ்கூல்' பேத்தி எட்டு மாசத்து வயித்துப் பிள்ளையோட மலையிலேருந்து விழுந் திருச்சே தெரியுமா.. அதை நம்ம ஆஸ்பத்திரியிலே வைக்க முடியாதுன்னு பதுளைக்கு அனுப்பிட்டாங்க. கையில மடியில ஒன்னும் இல்லாட்டி கோர்மேந்து ஆஸ்பத்திரிக்குப் போயி திரும்பி வர முடியுமா.. ஒனக்கு இந்த மாசமும் 'நயிட்டி ஸ்கூலுக்கு' அடுத்த மாசமுனு தான் பேச்சு. அவனுக்கு ஆபத்து ஒனக்கு பெருநாளு, என்ன செய்யலாம்.. ஒரு சீட்டைக் கொரச்சே அவனுக்குக் குடுத்திட்டேன். நீ பெருநாள் காரன் கிறதுனாளே இந்த வாட்டி நீ சீட்டுக் காசை குடுக்கவானாம்.'

'ஆயிரத்தைச் சொல்லுங்க எவ்வளவு நம்பி இருந்தேன்..'

'அது சரிடாப்பா.. இப்ப என்ன செய்யிறது. சத்தியமா ஒனக்குத்தான் குடுத்திருக்கனும்... ஓம்பேரைச் சொல்லியேதான் சீட்டு பிரிச்சேன்.. அங்கே உசிரு போவுதுல்ல, எது பெருசு...? அட ஒனக்கேதான் குடுத்திட்டேன்னு வைச்சுக்கோ, நீ என்ன செஞ்சுடப்போறே. நாலு புதுத்துணி எடுப்பே, ஒரு போத்தலைக் கொண்டாருவே...'

'அந்தக் கதை எல்லாம் எதுக்கு.. நானு ஒரு போத்தலைக் கொண்டாறேன், ஒம்பது போத்தலைக் கொண்டாறேன்.. காசைக் குடுத்திட வேண்டியதுதானே.. நானும் இப்ப காசு வாங்காமப் போகப் போறது இல்லே...'

வாசற்படியில் உட்கார்ந்துகொள்கின்றான்.

'பாத்தியா புத்தி எங்கே போவுதுன்னு, ஒம்பது போத்தல் கொண்டறுவீகளோ வெளக்கெண்ணை...' என்றவர் கேலியாகச் சிரித்தபடியே 'காசு வாங்காமப் போக மாட்டேல்ல.. சரி பாப் போமே.. ஏலெய் தம்பி, அந்த நாயை அவுத்து விடு.. காசு வாங்கிட்டுப் போறானா கடி வாங்கிட்டுப் போறானான்னு பாப்போம்' என்கின்றார்.

மனிதனிடம்தான் பேசலாம், வாதிடலாம், சண்டை போடலாம்!

நாயிடம்?

தோட்டத்திலிருப்பவர்கள் சாமப் பூஜைக்குப் போவது சிரமம். குழந்தை ஏசு பிறக்கும் அந்த நடு இரவுப் பூஜைக்குப் போகாவிட்டாலும் கிறிஸ்துமஸ் நாளின் பயன்...!

கொட்டும் மழையிலும், குளிரிலும், அந்தப் பன்னிரண்டு மணி இருளில் பத்து மைலுக்கப்பாலுள்ள கோவிலுக்குப் போய், சாம பூஜை காணுவதென்பது மிகவும் சிரமமான ஒரு காரியம்.

பெரிய கிளார்க், சின்ன டீமேக்கர், ஒரு சூப்பர்வைசர் குடும்பத்துடன் சிலுவையின் குடும்பத்தையும் சேர்த்தால் ஒரு பதினைந்துபேர் கிறிஸ்தவர்கள் இருப்பார்கள்.

பெரியவர், தானும் கிறிஸ்தவராக இருப்பதாலோ என்னவோ துரையிடம் பேசி லொறியைக் கொண்டு போக உத்தரவு வாங்கி விடுவார். இரவு பத்து மணி போல் எல்லோரும் பெரியய்யா பங்களாவுக்கு வந்துவிட வேண்டியது லொறி தயாராய் நிற்கும். உள்ளே நாற்காலி போட்டு வைத்திருப்பார்கள்– உட்காருவதற்கும் விழுவதற்கும்.

இந்த முறையும் லொறிக்கு உத்தரவு வாங்கியாகி விட்டது. அய்யா எல்லாருக்கும் சொல்லி அனுப்பிவிட்டார். 'ராத்திரிப் பூஜைக்குப் போகிறவர்கள் இரவு பத்து மணிக்கு பங்களாவுக்கு வரவேண்டும்' செய்தி கேட்ட சிலுவை சீறினான். 'வேறெ வேலை மயிரு கிடையாது.. காசிருக்கவேனுக சுண்ணாம்பு அடிச்சிக் கிறானுக... வெள்ளையும் சுள்ளையுமா மாட்டிக்கிட்டு கோயிலுக் குப் போவானுக... நானு என்ன செய்ய...'

அவன் மனைவி எவ்வளவோ வாதாடிப் பார்த்தாள். பிள்ளைகள் அழுது அடம் பிடித்தன. லொறியில் ஏறிப்போகக் கிடைக்கும் வாய்ப்பை இழப்பது சிறுசுகளுக்குத் தாங்கிக்கொள்ள முடியாத ஒன்று.

கொழுந்தேற்றிக் கொண்டு போகும்போது ஆசைக்குக் கொஞ்சம் தொத்தினாலும் விடமாட்டார்களே! இப்போது அதே லொறியில் ஏறி உட்கார்ந்து போவதென்றால் சாமான்யமா?

நாட்டுக்குப் போய்த் திரும்பிய சிலுவை மரமாகக் கிடந்தான். வழக்கத்தைவிட இரண்டு, மூன்று பங்கு கூடுதலாகக் குடித்திருந்தான்.

அவனை எழுப்பித் தட்டிப் புரட்டிப் பார்த்தவள் சோர்ந்து போனாள்.

அவனைத் திருப்பிப் போடக்கூட அவளால் முடியவில்லை. அவன் மிகவும் பாரமாய் இருப்பதுபோல் அவளுக்குத் தோற்றுகிறது.

'சரி சரி.. அது கெடக்கட்டும். நாம போயிட்டு வருவோம்' என்று பிள்ளைகளை உடுத்தச் சொன்னாள்.

*(செய்தி, 27–12–67)*

★

## தெளிவத்தை ஜோசப்பின் படைப்புகள்

1. காலங்கள் சாவதில்லை
(1974, நாவல், வீரகேசரி வெளியீடு)

2. நாமிருக்கும் நாடே
(1979, சிறுகதைகள், வைகறை வெளியீடு)

3. பாலாயி
(1997, மூன்று குறுநாவல்கள், துரைவி வெளியீடு)

4. மலையகச் சிறுகதை வரலாறு
(2000, துரைவி வெளியீடு)

5. இருபதாம் நூற்றாண்டின் ஈழத்து இதழியலும் இலக்கியமும்
(மூன்றாவது மனிதன் வெளியீடு)

6. குடை நிழல் – (நாவல், 2010)
(தமிழகப் பதிப்பு – எழுத்து பிரசுரம்)



இந்நூலின் முதன்மையான கதையாக உள்ளது 'மீன்கள்'. இதைத் தமிழில் எழுதப்பட்ட சிறந்த நூறு கதைகளில் ஒன்றாக நான் என்னுடைய 'நவீனத் தமிழிலக்கிய அறிமுகம்' நூலில் குறிப்பிட்டிருந்தேன். மலையகத் தமிழர்கள் தேயிலைத் தோட்டங்களில் வாழும் வாழ்க்கையின் அழுத்தமான சித்திரத்தை சுருக்கமாக உருவாக்கிவிடுகிறது இக்கதை.

இக்கதையை முதன்மையான கதையாக ஆக்குவது இதில் சொல்லாமல் சொல்லப் பட்டிருக்கும் அந்தத் தொழிலாளியின் இழிவின் கணம்தான். சுயவதையாக அவனில் நீடிக்கும் ஒரு தருணம் அது. உண்மையில் அதனூடாக நான் அவனைப் பார்க்கவில்லை, அவனுடைய மகள்களையே பார்க்கிறேன். அவர்கள்தான் கடைசியாகச் சுரண்டப்பட்டவர்கள். ஒடுக்கப் பட்டவர்களின் கடைசிநிலையில் இருப்பவர்கள்.

பல கோணங்களில் திறக்கும் ஒன்பது முக்கியமான கதைகளின் தொகுதி இது. நம் மண்ணிலிருந்து உதிர்ந்து சென்ற நம் ரத்தங்கள் எப்படி வாழ்ந்தனர், எப்படிப் போராடினர், எப்படி எழுந்தனர் என்பதற்கான ஆவணம். ஆகவே, இது நமது வரலாறு.

- ஜெயமோகன்






ISBN978-93-82648-64-2


விலை ரூ. 100


அட்டை வடிவமைப்பு: க. கதிரவன்